# கல்கி

KALKI
14.7.96
ரூ. 3.00



நல்லாட்சிக்குச் சவால்விடும் அதிகாரிகள்; எம்.எல்.ஏக்கள்!



உற்சாகத்தில் த.மா.கா!

பத்துக் கோடியை நூறு கோடியாக்கலாம்!





# கிடுக்கிப்பிடி போடும் வீரபாண்டியன்!

"நேரிடையாக பளிச்சுன்னு கேள்விகள் கேட்கிறீங்க'ன்னு பாராட்டவும் செய்யறாங்க. 'பதிலளிப்பவரை ஏதோ எதிரிபோல முறைச்சுப் பார்க்கிறீங்க'ன்னு குறையையும் சுட்டிக் காட்டறாங்க!''

சொன்னவர் வீரபாண்டியன். சன் டீ.வி யில் இப்போது இவர் நடத்தி வரும் 'நேருக்கு நேர்' நிகழ்ச்சியைப் பற்றிய விமர்சனங்களைத் தான் இப்படிக் குறிப்பிட்டார். இதுவரை பத்து வி.ஐ.பி.க்களைப் பேட்டி கண்டிருக்கும் இவரது தொலைக்காட்சித் தோற்றமும் கொஞ்சம் 'பரிணாம வளர்ச்சி' பெற்றிருப்பதைக் குறிப்பிட்டோம். ''இயற்கையாகவே திரையில் தோன்ற ஆசைப் பட்டேன். கொஞ்சம் கம்பீரமான உடையணிந்தா நல்லாயிருக்குமென்னாங்க. 'கோட், டை'யெல்லாம் அணிஞ்சுக்கிட்டேன். இப்போ 'ஒப்பனையிலே இன்னும் கவனம் செலுத்தலாமே'ங்கிறாங்க. மேக்கப் செய்துக்கிட்டாத் தான் என் முகம் பார்க்கும்படி இருக்கும்னு நினைக்கிறாங்க போல'' என்கிறார் நகைச் சுவை உணர்வுடன்.

இவரது தந்தை, காமராஜரின் நெருங்கிய தோழர்களில் ஒருவரான தியாகி திருநாவுக்கரசு. தங்களது ஊரான திருத்துறைப்பூண்டியில் சேரிவாழ் மக்களுக்குத் தொடர்ந்து



"சார்... உங்க 'கர்சீப்' கீழே கிடந்திச்சு... இந்தாங்க!"

"தாங்க்ஸ்! எப்படி கீழே விழுந் திருக்கும்?"

"நான் பர்சை எடுக்கிறப்போ விழுந் திருக்குமோ என்னவோ!"

– இரா.முத்துவேல்

பல்வேறு உதவிகளை அப்பா செய்து வந்த போது, அவற்றில் பங்கேற்ற அனுபவம் உண்டாம் வீர பாண்டியனுக்கு.

1952ல் ம.பொ.சி. அந்த ஊருக்குச் சென் றிருந்தபோது அவரைச் சென்னை திரும்ப விடாமல் செய்தது அப்போது ஏற்பட்ட கடும்புயல். அந்தச் சமயத்தில் தமக்கு மகன் பிறந்திருப் பதை இவர் தந்தை கூற, கட்டபொம்மன் புகழைப் பரப்புவதில் ஈடுபட்டிருந்த சிலம்புச் செல்வர் 'வீரபாண்டியன்' என்று குழந்தைக் குப் பெயர் சூட்டினாராம்.

வீரபாண்டியனுக்குப் பத்திரிகைகளில் பெரும் நாட்டம். "ஏதோ வேத நூல்களைப் பாதுகாப்பது போல் துக்ளக் இதழ்களையெல் லாம் பைண்ட் செய்து வச்சிருக்கேன்'' என்கிறார். திருத்துறைப்பூண்டி கூட்டுறவு வங்கியில் பதின்மூன்று வருடங்கள் காசாள ராகப் பணியாற்றிவிட்டு ('ஒரு பக்கம் வார இதழ்களைப் படிச்சுக்கிட்டே மறுபக்கம் ரூபாய் நோட்டுக்களை எண்ணியதிலே அப் பப்போ ஓவர்-பேமெண்ட் ஆன நிகழ்ச்சி யெல்லாம் உண்டு'), சென்னை வானொலி நிலையத்தில் அறிவிப்பாளராக வேலை கிடைத்ததும் அதில் சேர்ந்தார், பலரது எதிர்ப் பையும் பொருட்படுத்தாது. சில வருடங்களில் சிங்கப்பூர் வானொலி நிலையம் செய்த விளம் பரத்தைத் தொடர்ந்து, இவரது விண்ணப்பம் ஏற்கப்பட, சிங்கப்பூருக்குப் பயணம் ஆனார். அங்கு ஐந்து வருடங்கள் வானொலியில் பணிபுரிந்தார்.

''அங்கே பல கலைஞர்களின் நிகழ்ச் சிகளை வழங்கியிருக்கேன். ஆறு மாதங் களுக்கு ஒருமுறை சென்னைக்கு வந்து, இங்கே யிருக்கும் பல கலைஞர்களின் பேட்டிகளை ஒலிப்பதிவு செய்து எடுத்துக்கிட்டுப் போவேன்'' எனும் இவரை உலுக்கியது, குல தெய்வம் ராஜகோபாலின் பேட்டிதான். ''கோடம்பாக்கத்தில் மருத்துவமனையி லிருந்தே பேட்டியளித்த அவர், 'இதுதான் என் கடைசி பேட்டியாக இருக்கும்னு நினைக் கிறேன்' என்றார். அந்தப் பேட்டியின் ஒலி நாடாவோடு சிங்கப்பூருக்குச் சென்றபோது, குலதெய்வம் ராஜகோபால் இறந்தார் என்ற செய்தி காத்திருந்தது!''

சிங்கப்பூரிலேயே சில சன் டி.வி. நபர்களோடு நட்பு ஏற்பட, இங்கு நேருக்கு நேர் நிகழ்ச்சி வாய்ப்புக் கிடைத்த தாம். எந்த வி.ஐ.பி. யைப் பேட்டி காண்பது, எந் தக் கேள்வி களைக் கேட் பது என்பதி லெல்லாம் இவ ருக்கு முழுச் சுதந் தரம் கொடுத்திருக்கும் கலாநிதி மாறன், ''நிகழ்ச்சி யில் நீ நீயாகவே இரு'' என்றாராம். (அதாவது "இதற்கு முன் இந்த நிகழ்ச்சியை நடத்திப் பிரபலமாகிய ரபி பெர்னார்டாக இருக்க வேண்டாம்'' என்று அர்த்தம்?)

தா.பாண்டியனுடன் நடத்திய நேருக்கு நேரில் திருப்பரங்குன்ற வேட்பாளரைப் பற்றிக் குறிப்பிடும்போது, திருக்கழுக்குன்றம் என்று வாய் தவறிக் கூறியதை ஒப்புக் கொள் கிறார் வீரபாண்டியன்.

''எம்.ஜி..ஆரின் வாரிசு ஜெயலலிதா தானே?'' என்று இவர் கேட்க, "அப்படிச் சொல்வது அயோக்கியத்தனம்'' என்று தொடங்கி ஆர்.எம்.வீரப்பன் பாயிண்ட்டு களை அடுக்க, இவர் நிதானமாக "அப்படிச் சொன்னது நீங்கதான்" என்று அவரது பழைய பேட்டியொன்றைக் காட்டினார்.

வீரபாண்டியனின் குடும்பத்தினர் பெயர் களிலும் இலக்கியமும் தேசியமும் விரவியிருக் கிறது. மனைவியின் பெயர் மணிமேகலை. மூத்த மகனின் பெயர் வாஞ்சிநாதன். "அமரர் கல்கியின் எழுத்தில் பெரும் ஈடுபாடு உண்டு" என்றார். 'கல்கி'க்கான பேட்டி என்பதால் இப் படிக் கூறுகிறார் என்று நாம் நினைத்துக் கொண்டு விடுவோம் என்று கருதியோ என்னவோ, உடனடியாக ஓர் ஆதாரத்தையும் சுட்டிக் காட்டினார். "அப்பா" என்றபடி அவரிடம் வந்தான், அவரது இரண்டாவது மகன் வந்தியத்தேவன்!

சந்திப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

வண்ணப்படம் : **சாய்வர்ஷா**

# சுஜாதா பக்கம்



என் பால்ய நண்பர் டி.எஸ். சுந்தரராஜன் டில்லி சர்க்கார் உத்யோகஸ்தராக ஓய்வு பெற்ற பின் திருச்சியில் அறிவொளி இயக்கத்தின் ஆலோசகராக தன் பூர்வீகத்துடன் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறார். திருச்சி, மாவட்ட அறிவொளி இயக்கம் 'பொன்னி' என்கிற செய்திப் பத்திரிகை வெளியிட உதவுகிறார். திவ்யப்பிரபந்தம், ஆழ்வார் ஆச்சாரியார்கள், வைணவ சம்பிரதாயம் போன்றவற்றில் நிறையப் படித்தவர். எனக்கு அவ்வப்போது பிரபந்தத்தில் ஏற்படும் சந்தேகங்களை அவரிடம் கேட்டுக் கொள்வேன். கடைசியாகக் கேட்டது நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் கண்ணன் அர்ச்சுனனுக்கு கீதோபதேசம் செய்ததைப் பற்றி நேரடியாக எந்த பாசுரத்திலும் இல்லையே, இதற்கு என்ன காரணம் என்பதே. இந்த சந்தேகத்தை முதலில் என்னைக் கேட்டவர் பம்பாய் டாடா ஆதார ஆராய்ச்சி நிலையத்தின் இயற்பியல் தலைவராக இருக்கும் டாக்டர் விஜயராகவன் (தமிழறிஞர் இரா. ராகவையங்கார் அவர்களின் பேரன்). இப்போது 'டிஎஸ்எஸ்'ஸின் விளக்கம்:-

'கீதையைப் பற்றி நேரடியான குறிப்பு பிரபந்தத்தில் இல்லைதான். ஆனால் 'கீதை' என்கிற வார்த்தையே பிற்பட்ட வழக்கு. அதனால் கீதை திவ்ய பிரபந்த காலத்துக்குப் பிற்பட்டது என்று முடிவு செய்துவிட முடியாது. காரணம் கீதையில் சொல்லப் பட்டிருக்கும் கருத்துக்கள் சில சமயம் நேரடி மொழி பெயர்ப்புப் போல பிரபந்தத்தில் வருகின்றன. 'கதிராயிரம் இரவி கலந்தெரித்தாலொத்த நீள் முடியன்' என்கிற பெரியாழ்வாரின் வரிகள் 'திவி சூர்ய ஸஹஸ்ரஸ்ய' என்று துவங்கும் பதினொன்றாம் அத்தியாயத்தில் பன்னிரண்டாவது சுலோகத்தில் வருகிறது. 'கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும்' என்று துவங்கும் நம்மாழ்வார் பாசுரங்கள் பத்தும் கீதையின் ஒன்பதாம் பத்தாம் அத்தியாயத்தின் எதிரொலி.''

அண்மையில் காஞ்சிபுரம் கருட சேவைக்குச் சென்றிருந்தபோது அங்கே டெலிகாம் உத்யோகத்தில் இருந்து வைணவத்தில் ஈடுபாடுள்ள திரு ராமானுஜன் அவர்களிடம் இதே சந்தேகத்தைக் கேட்டபோது நேரடியாக குறிப்பு என்றால் ஒரு இடம்தான் சொல்ல முடிகிறது என்றார்.

''தேசமறிய வோர் சாரதியாய்ச் சென்று சேனையை நாசம் செய்திட்டு நடந்த நல் வார்த்தை அறிந்துமே? வார்த்தை அறிபவர் மாயவற் காளன்றி யாவரோ' என்ற திருவாய்மொழி வரிகளில் 'வார்த்தை' என்பது கீதையாக இருக்கலாம் என்று சொல்லத் தோன்றுகிறது என்று அபிப்ராயப் பட்டார். இதை அறிஞர்கள் விளக்கலாம்.

திருச்சி அறிவொளி இயக்கத்தின் 'பொன்னி' பத்திரிகையில் நாகநல்லூர் உப்பிலியபுரம் ஒன்றியம் அறிவொளித் தொண்டர் பி.ஜோதி எழுதிய 'பெண்ணாக இருந்து பார்' என்கிற கவிதையின் சில வரிகள் என்னைத் திகைக்க வைத்தன:-

''துள்ளித்திரி வயசுக்கு வா
அம்மாவுக்குப் பயப்படு
அடிக்கின்ற காற்றுக்கு
தாவணியைச் சரிசெய்
கனவு வளர்
விடலைத் தோழனின்
பிடிவாதத்துக்குப் பயந்து
ஒரே ஒரு கடிதம் எழுது
நீ ஆணாக இருந்தாலும்
அரை மணிநேரம்
இளம்பெண்ணாக இருந்து பார்
ஒரு பருவப் பெண்ணின் பெண்மை
உனக்குப் புரியும்.

விழித்திரு வீரிட்டு அழு
தாலாட்டுக்கு ஏங்கு
உற்றாரும் பெற்றாரும்
இல்லை என்று உணர்
ஈமொய்க்கக் கிட
கிடத்தப்பட்டிருப்பது
அரசுத் தொட்டில் என்று
அறியாமல்
அந்த வானம் பார்த்துச் சிரி

நீ ஆணாக இருந்தாலும்
அரை மணி நேரம்
பெண் குழந்தையாக இருந்து பார்.''

ஆச்சரியமான கவிதைகள், எப்போது எந்த மூலையிலிருந்து நம்மைத் தாக்கும் என்று சொல்லவே முடியாது. எப்போதும் அவைகளுக்குத் தயாராக இருப்பதே ஒரு நல்ல ரசிகனின் உவப்பு.

(மீண்டும் அடுத்த வாரம்)

# வெற்றிப் படிகளில் ஏற

எந்தவொரு நிறுவனமும் ஒரு பொருளை உற்பத்தி செய்வதில் மாத்திரம் கவனம் செலுத்தினால் போதாது; அதை விற்பனை செய்வதிலும் கவனம் செலுத்தியாக வேண்டும். எல்லாவற்றையும் விட முக்கியமாக நுகர்வோரை திருப்திப்படுத்த வேண்டும்! ஒரு நிறுவனத்தின் ஒவ்வொரு நடவடிக்கையும் நுகர்வோரை மனத்தில் கொண்டே அமைய வேண்டும். இல்லையென்றால் தோல்வி நிச்சயமாகிவிடும். இதற்குப் பாடமாக ஒரு சிப்ஸ் கம்பெனியைச் சொல்லலாம்.

குறிப்பிட்ட அந்த சிப்ஸ் கம்பெனி தனது உற்பத்திச் செலவுகளை எப்படியெல்லாம் குறைக்கலாம் என்று திட்டம் தீட்டியது. விஞ்ஞான பூர்வமான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. முடிவாக, ஒரு சிப்ஸ் துண்டத்துக்கும் இன்னொரு சிப்ஸ் துண்டத்துக்கும் இம்மியளவு கூட வித்தியாசம் இல்லாதபடி, சீவுகிற இயந்திரத்தைக் கண்டுபிடித்தார்கள்.



• ரேகா ஷெட்டி

சிப்ஸ் எல்லாம் இப்படி ஒரே சீராக இருந்ததால் ஒரு பாக்கெட்டில் முன்பைவிட அதிக அளவுள்ள சிப்ஸை நிரப்ப முடிந்தது. இதன் காரணமாக போக்குவரத்துச் செலவு கணிசமாகக் குறைந்தது. கடைக்காரர்களெல்லாம் முன்பு பத்துக் கிலோ சிப்ஸ் வைத்த இடத்தில் இப்போது பதினைந்து கிலோ சிப்ஸை அடுக்கி வைக்க முடிந்தது.

இதையெல்லாம் தங்கள் நிறுவனத்தின் மிகப்பெரிய சாதனையாக விளம்பரமும் செய்தார்கள். இருந்தும் விற்பனை அதிகமாகவில்லை. காரணம், அந்தக் கண்டுபிடிப்புகளால் நுகர்வோருக்கு எந்தப் பயனும் இல்லை!

"...எனவேதான் போட்டிகள் மிகுந்த இன்றைய வியாபார உலகில், நேரடி விற்பனை(Direct Marketing) முறைகளும் விற்பனையில் புதுப்புது உத்தி (Creativity in Marketing)களும் தேவைப்படுகின்றன. இவை பற்றி எடுத்துச் சொல்வதற்காகவும் கற்றுத் தருவதற்காகவுமே நிர்வாகவியல் பள்ளியொன்றையும் எங்கள் நிறுவனம் துவக்கியுள்ளது!'' என்கிறார் 'மேக்ஸ்வொர்த் கார்ப்பொரேட் சர்வீசஸ் லிமிடெட்'டின் தலைவரான திருமதி ரேகா ஷெட்டி.

நேரடி விற்பனை என்பது என்ன?

"நுகர்வோரை விளம்பரங்களின் மூலமாக அணுகாமல் நேரடியாகவே அணுகுவது. உதாரணத்திற்கு நாம் அடுக்குமாடிக் குடியிருப்புகள் கட்டி விற்பனை செய்வதாக வைத்துக் கொள்வோம். நாம் கட்டிக் கொடுக்கிற ஒரு குடியிருப்பின் விலை பதினைந்து லட்ச ரூபாய் என்றும் வைத்துக் கொள்வோம்.

"இவற்றை எப்படி விற்பது? நுகர்வோரை எப்படி அணுகுவது? பத்திரிகைகளில் விளம்பரங்கள் கொடுக்கலாம். இது ஒருமுறை. இதைக் கையாள்வதற்கு முன்னால் நாம் யோசிக்கிறோம். பதினைந்து லட்ச ரூபாய் விலையுள்ள நமது குடியிருப்பை ஒருவர் வாங்க வேண்டுமானால், அவரது ஆண்டு வருமானம் இரண்டு லட்சத்திலிருந்து நான்கு லட்ச ரூபாய் வரை இருக்க வேண்டும். இந்த வருமானம் உள்ளவர்களை மாத்திரம் நாம் அணுகினால் போதுமே! எதற்காக ஏராளமாகச் செலவு செய்து பத்திரிகைகளில் விளம்பரங்கள் கொடுக்க வேண்டும்?

''எனவே, முதலில் அப்படிப்பட்ட வருமானமுள்ளவர்களின் பட்டியலை நாம் சேகரிக்கிறோம். அவர்களோடு மட்டும் நாம் நேரடியாகவோ, தபால் மூலமாகவோ அல்லது தொலைபேசியிலோ தொடர்பு கொண்டு நமது அடுக்கு மாடிக் குடியிருப்புகளின் சிறப்புகள் பற்றி விரிவாகச் சொல்லுகிறோம்.

"இப்படி நாம் தொடர்பு கொள்கிறபோது, நமக்குச் செலவு மிச்சமாகிறது. பொதுப்படையாக விளம்பரங்கள் கொடுத்துவிட்டு நமது நுகர்வோருக்காக நாம் காத்திருக்கிற காலம் மிச்சமாகிறது. மூன்றாவதாக நாம் நமது நுகர்வோரிடம் தனிப்பட்ட முறையில் தொடர்பு கொள்கிறபோது, அவர்களுக்கும் நமக்குமான இடைவெளி குறைந்து, இருவருக்குமான உறவும் நம்பகத்தன்மையும் பலப்படுகிறது. இது தான் நேரடி விற்பனை முறை!''

விற்பனையில் புதுப்புது உத்திகள் என்பது எப்படிப்பட்டவை?

''எந்தவொரு தொழிலாக இருந்தாலும் புதுப்புது உத்திகளைக் கையாள வேண்டியது மிகவும் அவசியம். நமது வியாபாரம்தான் நன்றாக நடந்து கொண்டிருக்கிறதே, பிறகு எதற்

# துப்புது உத்திகள்...

காக புதிய புதிய உத்திகளுக்காக மூளையைக் கசக்கிக் கொள்ள வேண்டும் என்று பேசாமல் இருந்து விடக் கூடாது. நாம் யோசிக்கவில்லையென்றாலும் நமக்குப் போட்டியாக இருப்பவர்கள் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதால் நாளடைவில் நமது வியாபாரம் தோல்வியைத் தழுவும் வாய்ப்புகள் அதிகம்!

"உதாரணத்திற்கு ஒன்று சொல்கிறேன். நான் அப்போலோ மருத்துவமனையில் பணியாற்றிய போதுதான் மெடிகல் இன்ஸ்யூரன்ஸ், ஹாஸ்பிடல் மார்க்கெட்டிங் ஆகியவற்றை அறிமுகப்படுத்தினேன். மருத்துவமனைகளுக்கான நுகர்வோர்கள் நோயாளிகள் மட்டும்தான் என்கிற கருத்தை மாற்றினேன்! அதாவது நோய் வராமல் இருப்பதற்கும் மருத்துவப் பரிசோதனை செய்து கொள்வது அவசியம் என்கிற எண்ணத்தை மக்கள் மனத்தில் பதிய வைக்கும் முயற்சிகளை மேற்கொண்டேன்.

''பொதுவாகவே மருத்துவமனைக்கு வருபவர்களெல்லாம் நோயாளிகள்தான் என்கிற கருத்து நிலவுவதால், நோய்கள் வராத வரையில் யாரும் மருத்துவமனைக்கு வருவதை விரும்புவதில்லை. எனவே, 'Well woman checkup' என்கிற திட்டத்தைத் துவங்கினோம். அதன்படி, முதலில் பெண்கள் டாக்டர்களிடம் வர வேண்டியதில்லை. அழகுக் கலை நிபுணர்களையே சந்திப்பார்கள். அவர்கள் அழகுக் குறிப்புகளையெல்லாம் வழங்கி விட்டுக் கடைசியில், 'ஆரோக்கியமாக இருப்பதுதான் மிகச் சிறந்த அழகு; அதற்கு நோய்கள் வருவதற்கு முன்பே மருத்துவப் பரிசோதனைகள் செய்து கொள்வதுதான் சிறந்தது' என்று அறிவுரை கூறுவார்கள். எந்தப் பெண்ணுக்குத்தான்









அழகாக இருப்பது பிடிக்கா மல் போகும்? அதனால் எல் லாப் பெண்களும் மருத்துவப் பரிசோதனை செய்து கொள்ள ஆரம்பித்தார்கள்!

"இது போன்றவை மாத் திரமே புதிய உத்திகள் என்ப தல்ல; நுகர்வோருக்கு நாம் செய்கிற சேவை என்பது மிக மிக முக்கியம். உதாரணத் திற்கு நாம் டெலிவிஷன் பெட்டிகள் விற்பனை செய்வ தாக வைத்துக் கொள்வோம். ஒருவர் தம் வாழ்நாளில் ஒரே யொருமுறைதான் டெலி விஷன் வாங்கப் போகிறார். இல்லையென்றால் பல ஆண்டு களுக்குப் பிறகு, பழையதை மாற்றி விட்டு இரண்டாவது முறையாக மீண்டும் ஒன்றை வாங்கப் போகிறார். இந்த நிலையில் அந்த நுகர்வோ ருக்கு நாம் என்ன சேவை செய்துவிட முடி யும்? 'வாரண்டி பீரியட்' முடிகிற வரையில் அவரிடமிருந்து வரும் புகார்களுக்கு மதிப் பளித்தால் போதாதா? இப்படிப்பட்ட எண் ணமே நமக்கு வரக் கூடாது.


''என்னோட புதுநாடகத்தில் ஐ.ஏ.எஸ். அதிகாரியா நடிக் கிறீங்க...''

''முதலிலேயே ஜெயிலுக்குப் போயிடறேனா... கடைசியில் போறேனா...?''

— இரா. திலிப்

"ஒருவர் ஒரு டெலிவிஷனை வாங்கிச் சென்ற பிறகு, ஓர் இரண்டு மாதம் கழித்து, நாமாகவே போய், 'எப்படி வேலை செய்கிறது? உங்களுக்குத் திருப்தியாக இருக்கிறதா? எங்கள் உதவி ஏதேனும் உங்களுக்குத் தேவையா?' என்று விசாரிக்க வேண் டும். நேரில் போக முடி யாவிட்டாலும் டெலி போனிலோ அல்லது தபால் மூலமாகவோ விசாரிக்க வேண்டும். குறைகளே இல்லாத நிலையிலும் நாம் இப்படி விசாரிக்கிறபோது அந்த நுகர்வோருக்கு நமது பொருள் மீதும் நம்மீதும் ஏற்படுகிற திருப்தியும் நம்பிக்கையும் விலை மதிக்க முடியாததாகிறது.

"சராசரியாக ஒவ் வொரு நுகர்வோருக்கும் இருநூறு பேரைத் தெரிந் திருக்கும் என்பதால் அந்த இருநூறு பேரிட மும் நமது சேவை பற்றிச் சொல்லுவார். அந்த இரு நூறுபேரும் நம்மையே தேடி வருவதற்கான வாய்ப்புகள் ஒரு நுகர் வோருக்கு நாம் செய்யும் சேவையால் ஏற்படு கிறது. எனவே, ஒரு நுகர்வோர் என்பவர் நாம் நியமிக்கிற ஒரு மார்கெடிங் மானேஜருக்குச் சமமானவர் என்கிற நிலையை நமது சேவை யால் மட்டும்தான் ஏற்படுத்த முடியும்! ஒரு நிறுவனத்துக்கும் ஒரு நுகர்வோருக்கும் இடை யிலான உறவு என்பது முடிந்தால் வாழ்நாள் முழுவதுமானதாக இருக்கச் செய்ய வேண் டும்!" என்று கூறும் ரேகா ஷெட்டி, பல்வேறு

---

# தந்தை மகனுக்காற்றும் உதவி!

இந்தோனேஷியாவிலும் 'தாராளமயமாக்கல்' கொள்கை நடைமுறைப் படுத்தப்படுகிறது. இதற்குப் பச்சைக் கொடி காட்டிய ஜனாதிபதி சுஹர்தோ வெளிநாட்டு முதலீடுகளை விரும்பி ஆதரித்தார்.

ஆனால் போன மாதம் இந்தோனேஷியாவின் தொழில்துறை அமைச் சரகம் ''உள்நாட்டு மோட்டார் தயாரிப் பாளர்களுக்கு நிறைய வரிவிலக்கு தரப்படும்'' என்று ஓர் அறிவிப்பை வெளியிட்டது.

காரணம்? சுஹார்தோவின் இளைய மகன் ஹுடோமோ மண்டல புத்ரா பங்கேற்கும் ''பி.டி. டிமர் புத்ரா தேஷனல்'' என்ற நிறுவனம், புதிதாக 'தேசிய கார்'களைத் தயாரிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறது என்பதுதான். இதற்கு உதவத்தான் வரிவிலக்கு அறிவிப்பு!


• ஹுடோமோ

இதைத் தொடர்ந்து டெட்ராய்ட், ஜெனரல் மோட்டார்ஸ், க்றிஸ்லர் ஆகிய பிரபல மோட்டார் நிறுவனங்கள் இந்தோனேஷியாவில் தங்கள் முதலீடுகளை நிறுத்திக் கொள்ளப் போவதாகக் கூறியுள்ளன!

— குல்லூ

நிறுவனங்களுக்கும் வியாபார உத்திகளை வழங்கும் நிறுவனமாகவும் தமது நிறுவனத்தை ஏற்படுத்தியிருக்கிறார்.

"கிரியேடிவிடி என்பது அறுதியிட்டுக் கூற முடியாதது. ஒரு நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பிலுள்ளவர்தான் புதுப்புது உத்திகளையும் கருத்துக்களையும் உருவாக்குபவர் என்கிற நிலை இருக்கக் கூடாது. மற்ற பணியாளர்களின் கருத்துக்களைக் கேட்பது மிகவும் அவசியம். ஒவ்வொரு பணியாளரும் தமது கருத்துக்களைக் கூறுகிற அளவுக்குப் பயமில்லாத ஒரு சூழ்நிலை அவர்கள் பணியாற்றுகிற நிறுவனங்களில் இருக்க வேண்டும். ஒவ்வொரு பணியாளரிடமும் ஒவ்வொருவிதமான புத்திசாலித்தனம் இருக்கும். அதைக் கண்டுபிடித்துப் பயன்படுத்திக் கொள்கிற நிறுவனங்கள்தான் வெற்றிப் பாதையில் தொடர்ந்து நடைபோட முடியும்!" என்று கூறும் ரேகா ஷெட்டி, இதன் காரணமாகவே வெளிநாடுகளில் போதிக்கப்படும் கல்வி முறைகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்திருப்பதாகச் சொல்கிறார்.

"வெளிநாடுகளிலுள்ள பெற்றோரும் சரி, ஆசிரியர்களும் சரி, இந்த மாணவனிடம் இன்ன இல்லையே என்று வருத்தப்படுவதில்லை; இன்ன விஷயம் இருக்கிறதே என்று கண்டுபிடித்து, அதை வளர்க்கிற வகையில் போதிக்கிறார்கள்!" என்கிறார்.

இன்றைய வியாபார உலகில் ரேகா ஷெட்டியின் பெயரைத் தெரியாதவர்களே இல்லை என்கிற நிலை. இந்த நிலையை இவர் எப்படி எட்டினார்?

"என் தந்தை ஒரு சாதாரண பிசினஸ்மேன். நாங்கள் மூன்று பெண்கள். பி.ஏ.விலும் சரி, எம்.ஏ.விலும் சரி நான் சென்னைப் பல்கலைக்கழகத்திலேயே இரண்டாவது ரேங்கில் வெற்றி பெற்றேன்.

"பெண்கள் வேலைக்குப் போவதில் என் தந்தைக்கு விருப்பமில்லை என்பதால் திருமணத்துக்குப் பிறகுதான் வேலைக்குப் போனேன். மெகானிகல் என்ஜினியரான என் கணவர், அவராகவே நான் வேலைக்குப் போகலாம் என்று சொன்னதால் 'யுனைடெட் இந்தியா இன்ஸ்யூரன்ஸ்' கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தேன்.

"அங்கே வெளியாகும் ஹவுஸ் மாகசினைக் கொண்டு வரும் பொறுப்பு என்னுடையது. அந்தப் பத்திரிகை நான்கு மாதத்திற்கு ஒரு முறை வெளிவருகிற ஒன்று என்பதால் எனக்கு நிறைய நேரம் கிடைத்தது. அந்த நேரத்தில் என்ன செய்வது என்று யோசித்ததில் 'யுனைடெட் இந்தியா இன்ஸ்யூரன்ஸ்' பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்று நினைத்தேன். விளைவு? முதன் முதலாக அந்தக் கம்பெனியில் விளம்பரத் துறை என்று ஒரு தனி இலாகா ஆரம்பிக்கப்பட்டது.

"விளம்பரம், வியாபாரம் என்பதெல்லாம் ஒரு தனிக் கலை. அதனால் புதிய புதிய விஷயங்களைத் தேடித் தேடித் தெரிந்து கொள்ள வேண்டியதாயிற்று; யோசிக்க வேண்டியதாயிற்று. இதன் காரணமாகவே வெளிநாடுகளுக்கும் சென்றேன். அப்போதுதான் (74-ல்) 'கிரியேடிவிடியின் தந்தை' என்று அழைக்கப்படுகிற ஜார்ஜ் பிரின்ஸ் என்பவரைச் சந்தித்தேன். நிறையக் கற்றுக் கொண்டேன். பல்வேறு நிறுவனங்களில் பணியாற்றினேன். இருப்பினும் நான் எதையும் சாதித்து விட்டதாகக் கருதவில்லை. இன்னமும் கற்றுக்கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது என்பதுதான் உண்மை!" என்று ரேகா ஷெட்டி சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஒரு தொலைபேசி அழைப்பு.

"அது ஒன்றுமில்லை; ஒரு நிறுவனத்தின் டர்ன் ஓவர் பத்துக் கோடி. அதை நூறு கோடியாக்க வேண்டும்; ஆலோசனை தர முடியுமா என்கிறார்கள். 'ஏன் முடியாது; தாராளமாக முடியும்; வாருங்கள்' என்றேன்!" என்கிறார் ரேகா ஷெட்டி.



"நம்ம கட்சி ஆட்சியில் இருக்கும் போதே பினாமி பெயரில் வசதியா நாலு பழத் தோட்டம் வாங்கிப் போட்டது நல்லதாப் போச்சு."

"எப்படிச் சொல்றே?"

"நம்ம கட்சி மாஜி மந்திரி ஒவ்வொருத்தரையும் பார்க்க ஜெயிலுக்குப் போகும் போது கூடை நிறைய பழம் கொண்டு போக வசதியா இருக்கே!"

— நாஞ்சில் கூ. நாகராஜன்



"அந்த வேட்பாளர், இந்தத் தேர்தல்ல டிபாசிட் இழப்பார்னு எப்படி 'கரெக்டா' சொன்னீங்க?"

"பின்னே! தேர்தல் பொதுக் கூட்டத்துல 'எங்கள் கட்சி தேர்தலில் ஜெயித்தால், இந்திய ராணுவத்தைத் தனியார் துறையிடம் ஒப்படைப்போம்'னு பேசினாரே!"

— பி. ஆர். மஹேந்திரநாத்ராவ்

- இளங்கோவன்

அட்டை வண்ணப்படம்,
படம் : யோகா

21st Century's

# "Family-Deposit"



உங்கள் குழந்தைகளின் உறுதியான நம்பிக்கை




**A happy family, is a 21st Century Family.**

உங்கள் குழந்தைகளின் வளமான எதிர்கால பாதுகாப்பு என்று
வரும்பொழுது, உங்கள் குடும்பத்தின் ஈடுபாடும்,
உறுதுணையும் என்றுமே மாறுவதில்லை.

காலந்தோறும் முக்கியத்துவம் பெற்ற பாதுகாப்பு மற்றும்
நம்பிக்கை என்னும் குடும்ப மரபினால், **ஃபேமிலி டெபாசிட்**
என்னும் திட்டம் **ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சரியி**லிருந்து வருவது
உங்களுக்காகவே!

நான்கே ஆண்டுகளில் இந்நிறுவனம்
ரூ. 50 கோடியை எட்டியுள்ளது. CRISIL-ன் FA+ மதிப்பீட்டை
பெற்றிருக்கும் **ட்வெண்ட்டி ஃபர்ஸ்ட் செஞ்சரியின்**
**'ஃபேமிலி டெபாசிட்'** உங்கள் செல்லக் குழந்தைகளின் நெஞ்சக்
கனவுகளை நனவாக்கும். எனவே இன்றே **'ட்வெண்ட்டி ஃபர்ஸ்ட்**
**செஞ்சரி'** குடும்பத்துடன் இணைந்து கொள்ளுங்கள்.



## ட்வெண்டிஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மெண்ட் சர்வீசஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம்:** 'ஸ்ரீவித்யா' 32, டி.டி.கே. சாலை, சென்னை - 600 018. போன்: 4995155, 4994821, 4970151, 4970152. ஃபேக்ஸ்: 044-4994826.

**கிளைகள்:** ● **சென்னை:** (குரோம்பேட்டை) : 12, அனுமார் கோயில் தெரு, ராதா நகர் - 600 044.
● **(அம்பத்தூர்)** : 'சப்தகிரி', எம்டிஎச் ரோடு - 600 053 ● **மும்பாய்:** 603 B/604, தலாமால் சேம்பர்ஸ், 29, நியு மெரைன் லைன்ஸ் - 400 020 போன்: 022-2006811/2004153/ 2004154/2004160 பேக்ஸ்: 022-2004163.
● **கோயம்புத்தூர்:** 79/40, சேரன் டவர்ஸ், 78 அரசினர் கலைக்கல்லூரி சாலை - 641 018 போன்: 218094, ஃபேக்ஸ்: 0422-213673. ● **ஐதராபாத்:** 204/205, 6-3-550, மூன்றாம் தளம், ஆகாஷ் கங்கா, பெடிநோவா எதிரில், சோமாஜிகுடா - 500 082 போன்: 319371, ஃபேக்ஸ்: 040-312806. ● **திருநெல்வேலி:** 177, A-14, பார்வதி சங்கர் சன்ஸ் காம்ப்ளெக்ஸ், திருவனந்தபுரம் சாலை, வண்ணாரப்பேட்டை - 627 003 போன்: 0462-72827. ● **திருச்சி:** 6, சுந்தரம் ஆர்கேட், 13-A வில்லியம்ஸ் ரோடு, (திருச்சி சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டு எதிரில்), திருச்சி கண்டோன்மெண்ட் - 620 001.
● **பெங்களூர்:** 403, ஈடன் பார்க், விட்டல் மால்யா ரோடு - 560 001. போன்: 080-2225535

**ஃப்ரான்சைஸி:** ● **கும்பகோணம்:** 105, சாரங்கபாணி கிழக்கு (மாடி) - 612 001 போன்: 0435-30487.
● **மதுரை:** 18-A, பூக்கார சந்து, தானப்ப முதலி தெரு - 625 001 போன்: 0452-30481.
● **நெல்லூர்:** 16/II/227, வசந்த் விஹார், அர்பன் பேங்க் அருகில், கேடி நகர் - 524 001 போன்: 0861-31289.
● **சென்னை (அடையார்)** : 5/9, முதல் மெயின் ரோடு, கஸ்தூரிபாய் நகர் - 600 020 போன்: 4918669.

Sena · EV/TCMS/960191

*This advt. appears further to the statutory advt. published by the company in Makkal Kural and Trinity Mirror on 29th August and 18th November 1995. The text of the statutory advt. is also printed on the application form, which may be referred to before investing in the company's Deposit Schemes.*




• அமைதிக் கப்பல்

# 'கைது' செய்யப்பட்ட கப்பல்!

சீனா தனது அணு ஆயுதப் பரிசோதனையை நடத்த முடிவெடுத்திருக்கும் நிலையில் "எம்.வி.க்ரீன்பீஸ்" (MV Greenpeace) என்ற பெயரைத் தாங்கிய பிரம்மாண்டமான கப்பல் ஒன்று சீனாவிலுள்ள ஷங்காய் நகரை நோக்கி மெல்ல மெல்லச் சென்று கொண்டிருக்கிறது. இந்தக் கப்பலின் நோக்கம்?

அணு ஆயுதங்களுக்கு எதிராகப் பிரசாரம் செய்வது!

இந்தக் கப்பலை அனுப்பியிருக்கும் 'க்ரீன் பீஸ்' என்ற நிறுவனம் 'தாய்மையான சுற்றுப் புற சூழலுக்காகப் பாடுபட்டு வரும் மிகச் சிறந்த சர்வதேச அமைப்பு' என்ற நல்ல பெயரைப் பரவலாகப் பெற்றிருக்கிறது. இன்று நேற்றல்ல - கடந்த இருபத்தி ஐந்து வருடங்களாகவே! சமீபத்தில் இதன் நிர்வாக இயக்குனராக நியமிக்கப்பட்டுள்ள திலோ போட் என்ற ஜெர்மானியப் பொருளாதார நிபுணர், மிகவும் ஆர்வத்தோடு பல சுறுசுறுப்பான நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிறார்.



• திலோ போட்

சென்ற ஆண்டு பிரான்ஸ் நாடு பசிபிக் கடலின் ஒரு பகுதியில் அணு ஆயுத சோதனைகளை நடத்த நிச்சயித்திருந்த போது அந்தப் பகுதிக்கும் மேலே குறிப்பிட்டுள்ள கப்பல் பயணமானது. ஆனால் பலனில்லை. பிரான்ஸ் அரசு தன் முடிவில் பிடிவாதமாக இருந்தது. அது மட்டுமல்ல, இந்த அமைதிக் கப்பலையும் தனது கடற்படையின் மூலம் 'சிறைப்படுத்தியது'. சோதனைகள் முடிந்த பிறகே கப்பலை விடுவித்தது.

இந்தக் கப்பலில் அப்படி என்ன இருக்கிறது?

சுற்றுப்புற சூழல் கெடாமல் இருக்க முயற்சி செய்யும் பிரசாரகர்களைத் தவிர எழுபது லட்சம் டாலர் மதிப்புள்ள கருவிகளும் இருக்கின்றனவாம். சுற்றுப்புறத்திலுள்ள மாசு சதவீதத்தை அளக்க உதவும் கருவிகளும் இவற்றில் அடக்கம். தவிர சின்னச் சின்னதாக நான்கு படகுகளும் இதில் உண்டு.

பிரான்ஸ் நாடு முன்பு செய்ததைப் போல், சீன அரசும் இந்தக் கப்பலைப் பிடித்து வைத்துக் கொண்டால் என்ன செய்வதாக உத்தேசம்?

"எந்த அதிரடி நடவடிக்கையும் நாங்கள் எடுக்கப் போவதில்லை. அமைதியான முறையில்தான் எங்கள் பிரசாரத்தைச் சீனாவில் செய்வதாக இருக்கிறோம். இதற்கு சீன அரசு ஒத்துழைக்கும் என்று நம்புகிறோம்" என்கிறார் நிர்வாக இயக்குநர்.

— ஜி.எஸ்.எஸ்.

14

# ஆகாயச் சிறகுகள்

கழுத்தாம்பிடியாயிருந்தது, பிரேமாவுக்கு. உருவிக் கொள்ளவும் முடியவில்லை; ஒப்புக் கொள்ளவும் முடிய வில்லை.

தன்னை நம்பி வந்தவர்கள். வெறும் நம்பிக்கையல்ல; அனுபவப்பட்ட நம்பிக்கை. பால்ச்சாமி இருந்தால் காரியம் ஆகும் என்று வந்து விட்டார்கள். ஒருவர் இரு வரல்ல... பதினேழு பேர்.

'என்னாலே முடியாது' என்று சொல்லி விட்டு ஒதுங்கிக் கொள்ள முடியவில்லை. நடுநாயகமாக வர வேண்டாம். தலைமையேற்று முன் செல்ல வேண்டாம். பத்தோடு பதினொன்றாக... கூட்டத்திற்குள் ஒருத்தியாக 'தலைமறை வாகவே' வந்தால் போதும் என்கிறார்கள்.

போதாக்குறைக்கு, பாக்கியத்தம்மாவின் வற்புறுத்தல். நச்சரிப்பு. மனசுக்குள் நெருக்கமாய் நின்று கூறுகிற தைர்யம். இவளது பிறவிச் சுபாவமான கூச்ச சுபாவத்தை உணர்ந்து, அதை அங்கீகரித்துச் சொல்கிற தைர்யம். உற்சாகம்.

மறுக்க முடியவில்லை.

"சரி வாரேன்... நா யாருகிட்டேயும் பேச மாட்டேன். பேசுன்னு சொல்லக் கூடாது."

"வேண்டாம். மூச்சே விட வேண்டாம், நீ. ஆள் கணக்குக்கு வந்தாப் போதும். பால்ச்சாமி பேரைச் சொல்லிக்கிட்டே உள்ளே போயிருவம்."

புறப்பட்டு விட்டனர். ஏறுபொழுது. காலை பத்தரை மணி இருக்கும். பிரேமாவுக்குள் இன்னும் சஞ்சலம். எதையும் ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. தெம்பில்லை. மனசுக்குள் கூச்சப் படபடப்பு. சுற்றிலும் பெண்களின் பேச்சுச் சத்தம். 'அப்படிப் பேசணும், இப்படிப் பேசணும்' என்கிற பெண்களின் மனஉக்கிரம், பேச்சுக்களாய் வெளித் தெறித்தன.

பிரேமாவுக்கு நடைத் தயக்கம். கால்கள் பின்னிக் கொள்கிற உணர்வு. மனசுக்குள் பயம். ஏதேதோ கற்பனைகள். பிய்த்துப் பிறாண்டிக் கொள்கிற மனக்குரங்கு.

வட்டாட்சியர் அலுவலக வளாகம். நிறைய சைக்கிள்களும் ஒரு ஜீப்பும் நின்றன. வேப்பமரங்களும், வாகை மரங்களும் நிழல் தருகின்றன. மரத்து நிழலில் நின்ற பிறகுதான் –

வந்தது குழப்பம். யாரைப் பார்க்க? இன்ன காரியத்துக்கு இந்த ஆபீஸர் என்றிருக்குமே... ரேஷனுக்கு யார் பொறுப்பு? யாரைப் பார்க்க?

குழப்பத்தையும் திகைப்பையும் பாக்கியத்தம்மாதான் உடைத்தாள். "தாசில்தாரைப் போய்ப் பார்ப்போம். அவரு சொல்லட்டும் மத்த வெவரத்தை..."

மெல்ல நிமிர்ந்து பார்த்தாள், பிரேமா.

சூட்டும் சட்டையுமாக நிறைய்ய ஆண்கள். கரை வேட்டிகளோடு வந்து போகிற ஆட்கள். உள்ளே அலுவலகப் பணியாளராக இருந்து பணியாற்றுகிற சில பெண்கள்.

இத்தனை ஆண்களுக்கு மத்தியில் தினம் தினம் வந்து... இருந்து... பேசிப் பழகி... பணியாற்றுகிற பெண்களா? இவர்களுக்குக் கூச்சமேயில் லையா? பயமேயில்லியா? எப் படி முடிகிறது, இந்தப் பெண் களுக்கு?

## மேலாண்மை பொன்னுச்சாமி

இவளுக்குள் வியப்பான நினைவுகள்.

உள்ளே நுழைந்தார்கள். எதிரே ஒருவர் வந்து மறித்தார். வயது நாற்பது இருக்கும். மைக்கறுப்பு, கறுப்புப் பேண்டும், காப்பிக் கலர் சட்டையும் போட்டிருந்தார். ஏதோ ஒரு கிளார்க்.

"எங்கம்மா போறீக..?"

"தாசில்தாரைப் பாக்கணும்."

"என்னத்துக்கு?"

"ரேஷன் கார்டு கெடைக்கலே!"

"கார்டு கெடைக்கலியா? வந்து குடுத்தவங்ககிட்டே போய்க் கேளுங்க."

"கேட்டுட்டோம்."

"நூறு எரநூறை குடுத்துட்டுக் கேளுங்க. கார்டு தானா வரும். இதுக்கெல்லாம் பொம்பளைக சேர்ந்து வந்தீகன்னா... எங்க பொழைப்பு நாறிப் போகும்."

"பொம்பளைகன்னா... மட்டமா? உங்க ஆத்தா, அக்கா, தங்கச்சிக எல்லாம் பொம்பளையில்லியா?"

"ஏய்ய்...! என்ன... ரொம்பப் பேசுறீக? தாசில்தாரை இப்பப் பாக்க முடியாது. போங்க... போங்க."

"பாத்தாகணும் நாங்க."

"இன்னிக்கு முடியாது. சொன்னாக் கேளுங்க. மரியாதையோட வெளியே போங்க."

"வந்துருக்குறது யாரு தெரியுமா?"

"யாரு...? கவர்னர் பொண்டாட்டியா? போம்மா... வேலையைப் பாத்துக்கிட்டு."

"தலைவர் பால்ச்சாமியோட சம்சாரம் வந்துருக்கு."

"பால்ச்சாமியோ... மோர்ச்சாமியோ... எந்தச் சாமி பொண்டாட்டியும் இப்ப தாசில்தாரைப் பார்க்க முடியாதுன்னா.. முடியாதுதான். இப்ப... மரியாதையா வெளியே போறீகளா... இல்லே, போலீசைக் கூப்பிடவா?"

இந்நேர வரைக்கும் துணிச்சலாய் நின்று பேசிய பாக்கியத்தம்மா, போலீஸ் என்றவுடன் பதறி விட்டாள். துவண்டு சோர்ந்து விட்டாள். 'இனி என்ன செய்ய' என்று தெரியாமல், திரும்புவதற்கு யத்தனித்தாள். எல்லா



# மிஸ். மிசா பாரதி!

பெற்றோர் கனடாவில் இருக்கிறார்கள். எனவே, மகன் மத்திய மந்திரியாகப் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்ட போது விழாவில் கலந்து கொள்ள முடியவில்லை. செண்டிமெண்டலாய் போட்டோவில், தன் தாயாரின் காலைத் தொட்டு வணங்கி விட்டு, விழாவுக்குப் புறப்பட்டார். (அவர் ராஜ்ய சபா, லோக் சபா, இரண்டிலும் எம்.பி., இல்லை) அவர்: பல்வந்த் சிங் ராமூவாலியா.

"நீங்கள் எந்தக்கட்சி?" என்ற பத்திரிகையாளரிடம், மந்திரி சொன்ன பதில்: "இப்போதைக்கு அதிருஷ்டக் கட்சி. இல்லாவிட்டால் மந்திரியாகியிருப்பேனா?"

சாலைமறியல், ரயில் மறியல் எல்லாம் போரடித்துப் போய், அண்மையில் விமான மறியலில் இறங்கினார்கள் சிலர். இது நடந்தது அவுரங்கபாத் விமான நிலையத்தில். தங்கள் கோரிக்கைகளை மாநில அமைச்சரைச் சந்தித்து வலியுறுத்த விரும்பியவர்கள், அமைச்சரைச் சந்திக்க முடியாமல் போய்விடவே, அவர் பயணம் செய்த விமானத்தை மறியல் செய்தனர்!

மறைந்த பாகிஸ்தான் அதிபர் புட்டோவின் வாழ்க்கை வரலாறு படமாகிறது. புட்டோவாக நடிக்க விருப்பவர்: நசுருதீன் ஷா.

ஆறு ஆண்டுகளுக்கு முன், இங்கிலாந்தில் ஒரு மிருகக் காட்சி சாலைக்குப் போனான் மாத்யூ மாக்டைடு. புஷ்டா என்ற சிம்பன்சி குரங்கை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது, அது தன் கையைக் கூண்டுக்கு வெளியே நீட்டி, மாத்யூவின் கையை இழுத்துக் கடித்து விட, கை துண்டாகியது. இப்போது பத்து வயதாகும் மாத்யூ, மிருகக் காட்சிசாலை நிர்வாகத்தின் மீது ஒரு கோடி ரூபாய் நஷ்ட ஈடு கேட்டு வழக்குப் போட்டிருக்கிறான்!

மருத்துவக் கல்லூரியில் படிக்கும் அந்த மாணவியின் பெயர் மிசா பாரதி. காரணம், நெருக்கடி நிலையின்போது கொடுமைக்குள்ளான அப்பாவுக்கு, அப்போது பிறந்த பெண் குழந்தை என்பதால்! மிசா பாரதியின் அப்பா ஒரு முதலமைச்சர். பெயர்: லல்லு பிரசாத் யாதவ்.

தமிழ்ப்படம் தேவர் மகன், இந்திக்குப் போகிறது. அனில் கபூர், அம்ரிஷ்பூரி, தபு நடிக்க, இயக்கப் போகிறவர் மலையாள பிரியதர்ஷன்.

- மௌனி

ருக்குமே சோர்வு தட்டி விட்டது. இத்தனை கரடுமுரடான பதில் கிடைக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. இவ்வளவு மூர்க்கமாய்ப் பேசுவார்கள் என்று நினைக்கவில்லை.

பாக்கியத்தம்மா முகத்தில் அயர்ச்சியும், மிரட்சியும். மற்ற பெண்களும் திகைப்பும் கிலியுமாக வெருள வெருள விழித்தனர். துவண்டு சரிந்த மனநிலை. திரும்புவதைத் தவிர வேறு வழியில்லை.

தோற்றுப் போய் விட்டோம். முகத்தில் கரியைப் பூசிக் கொண்டோம். இனி வீடு போக வேண்டியதுதான். ரேஷன் கார்டு இனி கிடைக்க வழியேயில்லை. புலம்பிச் சாவதைத் தவிர வேறு புகல் இல்லை.

பாக்கியத்தம்மா ரொம்பத் துவண்டு போனாள். அயர்ச்சியின் உச்சத்தில் பெருமூச்சு விட்டாள். "ஹூம்... வாங்கடி, வீட்டைப் பாத்துப் போய்ச் சேருவோம்."

ஆனால், பிரேமாவின் முகத்தில் இறுக்கம். அவமானப்பட்ட ரௌத்ரம். கண்களில் உக்கிரமான பார்வை.

'பால்ச்சாமியோ... மோர்ச்சாமியோ... எந்தச்சாமி...'

அந்த வார்த்தைகள் வந்த அலட்சியம். வார்த்தைகளில் தெறித்த எரிச்சல். துடுக்குத்தனம். தன் புருஷனை அவமதித்த அந்தத் திமிர். அவளுக்குள் சுரீரென்றது. அனல் சாட்டையாய் அவளைச் சுழற்றியடித்த அந்த வார்த்தைகள்.

பிரேமாவுக்குள் திகுதிகுவென்று தகித்தது. தன்னை அவமானப்படுத்தியிருந்தால் கூட, நாலு சொட்டுக் கண்ணீரில் அதை மறந்திருப்பாள். தன் புருஷனை அவமதிக்கிறான்கள். எந்த நியாயமோ தகுதியோ இல்லாமல், ஒரு தர்மத்தை எட்டி மிதிக்கிறான்கள். ஒரு கருணையை காறித் துப்புகிறான்கள்.

குஞ்சைத் தூக்குகிற பருந்தைப் பார்க்கும் தாய்க் கோழியாய் அவள் மனசு தகித்தது. 'என்னமாச்சும் செய்யணும்' என்று மனசு கிடந்து துடித்தது. 'என்ன செய்ய... என்ன செய்ய' என்று பரபரக்கிற மனத்தீவிரம்.

அப்போதுதான்... 'வீட்டுக்குப் போவோம்' என்று புறப்பட்ட பாக்கியத்தம்மா.

"வேண்டாம். வீட்டுக்குப் போக வேண்டாம். வாங்க" என்று வெறிபிடித்தவளைப் போல, பத்ரகாளியாக - அழைத்த பிரேமா. குரலின் அடர்த்தியில் ருத்ரகாளியின் சீற்றம்.

"எங்க?"




ஊட்டியில் பணியாற்றிக் கொண்டிருந்த போது இருபது கிலோ மீட்டர் தொலைவில் இருந்த கிராமம் ஒன்றில் அலுவலக நண்பருக்குத் திருமணம். அவரது அழைப்பின் பேரில் அலுவலகப் பணியாளர்கள் அந்தக் கிராமத்திற்குச் சென்றோம். மிக அமைதியான சூழல். சுமார் 100 வீடுகளே இருக்கும். திருமணம் முடிந்தவுடன் ஆளுக்கொரு இனிப்பு பாக்கெட் கொடுத்தார்கள். சாப்பாடு...? ஒவ்வொரு வீட்டுக்காரரும் எங்களில் ஐந்தைந்து பேராக அழைத்துப் போய் அவரவர் வீட்டில் எளிமையாக ஆனால் கடக்கட சாப்பாடு பரிமாறினார்கள். ஆடம்பர மற்ற அந்த எளிமையான திருமணம் நகர சந்தடிகளில் நடக்கும் அட்டகாசமான திருமணங்களைப் பார்க்கும் போதெல்லாம் என் நினைவில் இன்னும் தோன்றுகிறது. அது ஒரு மறக்க முடியாத இனிய அனுபவம்.

– கலை. அரசு

---

"கட்சியாபீஸுக்குப் போவம்."

"பால்ச்சாமி இல்லியே..."

"வேற தோழர்கள் இருப்பாக. வாங்க."

பத்தோடு பதினொன்றாக தலைமறைவாகப் புதைந்திருந்த பிரேமா, ஒன்றாக முதலில் நடந்தாள். பால்ச்சாமி சொல்லியிருக்கிற அடையாளங்கள். தெருவின் முகவரி, மளமள வென்று நடந்தாள்.

குறுகலான தெரு. பாழடைந்த பழைய கட்டடம். முகப்பில் சிவப்பு போர்டில் வெள்ளையெழுத்துக்கள். இவளைத் தொடர்ந்து உள்ளே நுழைகிற பெண்கள்.

அங்கே –

நாற்பது பெண்கள் இருக்கும். பெரும் கூட்டம். சந்தைச் சளசளப்பாய் சத்தக்காடு. நடுவில் தங்கம்மா. ஒடிசலான தோற்றம். அதே இளைப்பு. பேச முடியாமல் பேசுகிற சத்தம். தொண்டைக்குள்ளேயே முதல் வார்த்தை கிசுகிசுப்பாகி விடுகிற குரல்.

தங்கம்மாவை ரொம்ப நாளைக்குப் பிறகு பார்க்கிறாள்.

இவள் காய்ச்சலில் கிடந்து எழுந்த பிறகு, ஒருநாள் தங்கம்மா வந்திருந்தார். பிரேமாவைப் பார்த்து நலம் விசாரித்தார். அப்போது, பிரேமாவுக்குள் கசப்பு. ஆழ்ந்த வெறுப்பு. எந்தப் பதிலும் சொல்லாமல், இறுக்கமாய் இருந்து விட்ட பிரேமா.

போகும் போது... பால்ச்சாமியை மட்டும் தனியாக அழைத்த தங்கம்மா. அடங்கிய குரலில் அவனைக் கண்டித்த சத்தம்.

"உங்க ஒய்ஃப் ரொம்ப அரண்டு போச்சு. எல்லாம் நீங்கதான் காரணம்!"

"இல்லேம்மா... நா... வந்து..."

"நீங்க நல்லதை நெனைச்சுத்தான் செய்ஞ்சீக. ஆனா முரட்டுத்தனமா – சூர்க்கமா செய்ஞ்சுட்டீக. வாலிபத் தீவிரம்னு சொல்றதா, ஆணாதிக்கக் கொணம்னு சொல்றதான்னு தெரியலே."

"இல்லேம்மா... நா அப்படியில்லே!"

"இல்லே பாலு. பெண்ணுக்குச் சுதந்தரம் குடுக்குறது நல்லதுதான். ஆனா, சொமையை தூக்கிக் குடுத்த மாதிரியிருக்கக் கூடாது. விடுதலை குடுக்குறதா நெனைச்சுக்கிட்டு, கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளிரக் கூடாது. சரி சரி... பரவால்லே... இனிமேலாச்சும் மென்மையா டீல் பண்ணுங்க."

போய்விட்டார்கள். எல்லாச் சத்தமும் பிரேமாவுக்குக் கேட்கத்தான் செய்தது. ஆனாலும், 'வேஷம்.. பாவ்லா... தூண்டி விட்டுட்டு, இப்ப வந்து கருணை வேஷம் போட்டுப் போகுது' என்று கசப்புடன் பொருமிக் குமைந்தது, இப்போதும் நினைவில் உரசுகிறது.

தங்கம்மா பிரேமாவை பார்த்ததும் விசேஷ அக்கறையுடன் வந்தார். பக்கத்திற்கு வந்தார்.

"வாம்மா... பால்ச்சாமி ஒய்ஃப்தானே நீ? பிரேமாதானே?"

"ஆமம்மா..."

"என்னம்மா வெஷயம்?"

தங்கம்மாவின் பார்வை, இவள் பின்னால் வந்த பெண்கள் மீது படர்ந்தது.

"ரேஷன் கார்டு பிரச்னைம்மா...."

"இங்க இவங்களுக்கும் இதுதான்.. பிரச்னை."

"நாங்க தாலூகாபீஸ் போயிருந்தோம்மா..."

"அப்படியா? வெரிகுட்."

பாக்கியத்தம்மா குறுக்கிட்டு வேதனையும் புலம்பலுமாய் நடந்ததையெல்லாம் விவரித்தாள். 'பொம்பளை', 'ரூபாய் தந்து கார்டு வாங்கச் சொன்னது', 'பால்ச்சாமி, மோர்ச்சாமி' எல்லாம் சொன்னாள்.

பிரேமா குறுக்கிட்டு ரொம்ப ஆக்ரோஷமாய்ச் சொன்னாள்.

"பால்ச்சாமி மோர்ச்சாமின்னு அந்தாளு சொன்னானே... அவனைச் சும்மா விடக் கூடாதும்மா..."

தங்கம்மா உள் பக்கமிருந்த தோழரிடம் கூறினார்.

"நாங்க மறியலுக்குப் போறோம். நீங்க கலெக்டருக்கும் எஸ்.பிக்கும் போன் பண்ணிச் சொல்லிருங்க."

துப்பாக்கிச் சூடு வரைக்கும் போய் விடுமோ எனப் பயந்தாள் பிரேமா, உள்ளூர.

(தொடரும்)



1996 ஜூலை 14
தாது ஆனி 30
மலர் : 54
இதழ் : 50

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.



## ஏழைகளின் முதுகில் முதல் சவுக்கடி!

'இது ஏழைகளின் அரசு...!' என்று தமுக்கடித்துக் கொண்டே, தேவே கௌடாவின் ஆட்சி, அந்த ஏழைகளின் முதுகில் முதல் சாட்டையடியைச் சுளீரென்று விளாசியிருக்கிறது!

பெட்ரோலிய பொருட்களின் 30 சதவிகித விலையுயர்வு என்பது ஏழை, எளிய மக்களுக்கு இழைக்கப்படும் மாபெரும் கொடுமை!

பட்ஜெட்டுக்கு முன்னதாகவே இந்த விலையுயர்வை அறிவித்துள்ளது மத்திய அரசு. தனது முதல் பட்ஜெட்டில் அதிக சுமைகளை மக்களுக்கு அளிக்காதது போன்ற ஒரு மாயையை ஏற்படுத்திவிடலாம் என்ற நம்பிக்கை போலும்!

ஆனால், மக்கள் இந்த மலிவான யுக்திகளால் ஏமாந்துவிடமாட்டார்கள்! 'கெரசின் விலை ஏற்றப்படவில்லை; அதனால் ஏழைகளுக்கு பாதிப்பு இருக்காது' என்ற நொண்டி சமாதானத்தைக் கண்டு அவர்கள் கேலியாகச் சிரிப்பார்களேயொழிய சந்தோஷப்படமாட்டார்கள்.

சமையல் காஸ் என்பது, இன்று மிக எளிய குடும்பங்களிலும் அன்றாடம் உபயோகிக்கும் பொருளாகிவிட்டது. கிட்டத்தட்ட ரேடியோ அளவுக்கு வீட்டுக்கு வீடு இடம் பிடித்திருக்கும் இந்த அத்தியாவசிய பொருளின் விலை 30 சதவிகிதம் உயர்த்தப்பட்டிருப்பது அநியாயம்!

பெட்ரோலும் டீசலும் 25 சதமும் 30 சதமும் விலை உயர்வதால் குடிசை - வாழ் ஏழைகளுக்கு என்ன பாதிப்பு? எனறு வாதாடுவதும் அயோக்கியத்தனம்.

நாட்டில் ஓடும் பெரும்பான்மையான கார்கள் அரசாங்கம் அல்லது தனியார் நிறுவனங்களுக்குச் சொந்தமானவை. அவற்றின் இயக்கத்துக்கு ஆகும் பெட்ரோல் செலவினை அரசாங்கமும் அந்தத் தனியார் நிறுவனங்களும்தான் கொடுக்கின்றன. கணிசமாக உயரப் போகும்




பெட்ரோல் செலவைச் சமாளிக்க, தனியார் நிறுவனங்கள் தங்கள் தயாரிப்புகளின் விலையை உயர்த்தும்; அரசாங்கமோ மக்கள் மீது விதிக்கும் வரியை உயர்த்தும்.

நுகர்வோர் என்கிற முறையிலும் வரி செலுத்துவோர் என்கிற முறையிலும் மாதச் சம்பளம் வாங்கும் மத்தியதர வகுப்பினர் பேரவஸ்தைக்கு உள்ளாவார்கள். சொந்தத்தில் மொபட், ஸ்கூட்டர் போன்ற இரு சக்கர வாகனங்கள் வைத்திருப்பதும் இத் தரப்பினரே என்பதால் அவர்கள் பெட்ரோலுக்கு வேறு கைக்காசைக் கூடுதலாகச் செலவழிக்க வேண்டிவரும்!

டீசல் விலை உயர்வினால் சரக்குக் கட்டணங்களும் ரயில் கட்டணங்களும் பஸ், ஆட்டோ கட்டணங்களும் கண்டபடி ஏறப்போகின்றன. இதன் விளைவுகளையும் சுமக்கப் போவது ஏழை எளியவர்களும் நடுத்தர வர்க்கத்தினரும்தான்.

பெட்ரோல், டீசல், அரிசி போன்ற ஒரு சில அத்தியாவசியப் பண்டங்களின் விலை ஏறுவதால், சங்கிலித் தொடராக, வேறு பல துறைகளிலும் விலையேற்றம் நிகழ்ந்துவிடும். இதை நன்கு உணர்ந்துதான் உலகின் பல்வேறு நாடுகளிலும், இத்தகைய அத்தியாவசிய பண்டங்களின் விலையை அரசாங்கமே நிர்வகித்துக் கட்டுப்படுத்துகிறது. அப் பொருள்களை மானிய விலைக்குக் கிடைக்கச் செய்கிறது.

மானியச் செலவு அதிகமாகிறது என்பதற்காக இந்த அத்தியாவசிய பண்டங்களின் விலையை உயர்த்துவது, தேன் கூட்டைக் கலைப்பது போன்ற காரியம்!

அரசின் வீண் ஆடம்பரச் செலவுகளைக் குறைக்க முடியவில்லை. அமைச்சரவையோ, அரசியல் கட்டாயங்கள் காரணமாக விஸ்தரிக்கப்பட்டுக் கொண்டேயிருக்கிறது! இதனால், செலவுகள் மேலும் அதிகமாகின்றன! செலவுகளைக் கட்டுப்படுத்த வக்கில்லாமல், அரசு இத்தகைய மக்கள் விரோத நடவடிக்கைகளை எடுக்கிறது. ஆட்சியில் இருப்போர் நலன் கருதி, மக்கள் நலன் கைவிடப்படுகிறது!

## மக்களின் உணர்வுகளை மதிக்கும் அரசு!

அதிகாரிகள் அனைவரும் பத்திரிகைகள் செய்தித் தாள்களை வாங்கவும் படிக்கவும்




வேண்டும் என்று ஆணை பிறப்பித்து, ஒரு சிறிய சலசலப்பை ஏற்படுத்தியிருக்கிறார் தமிழக முதல்வர்!

அவருடைய இந்தக் கோரிக்கை முற்றிலும் வரவேற்கப்பட வேண்டியதேயாகும். மக்களின் மனப்போக்கையும் கருத்தையும் பிரதிபலிப்பவை பத்திரிகைகள்தான் என்பதை முதல்வர் உணர்ந்திருக்கிறார்.

பத்திரிகை விமர்சனங்களை, செய்திகளை ஒன்று புறக்கணிப்பது, அல்லது மறுப்பது என்று வழக்கம் கொண்டிருந்தார் ஜெயலலிதா. கருணாநிதியின் ஆட்சியில் பத்திரிகைகள் படிக்கப்படுவதோடு, அவற்றில் சுட்டிக் காட்டப்படும் அம்சங்கள் மீது நடவடிக்கைகளும் எடுக்கப்படுகின்றன.

'புலிகளுக்கும் கள்ளக் கடத்தல்காரர்களுக்குமிடையே அபாயகரமான கூட்டு இருக்கிறது' என்றொரு பத்திரிகைச் செய்தி வெளியானது. அதன் அடிப்படையில், காவல்துறை உயர் அதிகாரிகளை அழைத்துப் பேசி, உடனடி நடவடிக்கைகளுக்கு உத்தரவிட்டிருக்கிறார் முதல்வர். கடந்த ஆட்சியின் ஊழல்களை அம்பலத்துக்குக் கொண்டு வருவது; கடைக்காரர்களிடம் கட்டாய வசூல் செய்த குண்டர்களைக் கட்டுப்படுத்தியது; கடும் மழையில் பாதிக்கப்பட்ட சென்னை வாசிகளுக்கு உடனடி நிவாரணம் என்று மேலும் பல உதாரணங்களைக் கூறலாம்.

பத்திரிகைகளின் குரல் மட்டுமின்றி மக்களின் தனிப்பட்ட முறையீடுகளுக்கும் செவி சாய்ப்பு இருக்கிறது. முதல்வரின் புகார் பிரிவுக்கு மனு செய்து, உடனடியாகத் தமது குறை தீர்க்கப்பட்டதாக ஆச்சரியத்துடன் நமக்கு எழுதியுள்ளார் வாசகி காட்டூர், எஸ். அருள்மொழி.

பலதரப்பட்ட மக்களின் உணர்வுகளும் மதிக்கப்பட வேண்டும் என்பதிலும் முதல்வர் கண்ணும் கருத்துமாக இருப்பது புரிகிறது. ராஜாஜி மாவட்டம் எனப் பெயர் சூட்டியதற்கான அவரது விளக்கம் அந்த எண்ணத்தைப் பிரதிபலிக்கிறது. வீரமணிக்கு இந்த விளக்கம் தரப்பட்ட அதே நாடார் மாநாட்டில், ஜாதிகளை மறந்து, 'தமிழர்கள்' என்ற உணர்வின் கீழ் நாம் ஒருங்கிணைய வேண்டியதன் அவசியத்தை அவர் வலியுறுத்திப் பேசியிருக்கிறார்.

மக்களின் உணர்வுகளை மதித்து நடக்கும் முதல்வர் கிடைத்திருக்கிறார். முதல்வரின் உணர்வுகளை மக்களும் மதிக்கப் பழகினால், தமிழகம் உன்னத நிலை அடைவது உறுதி.

**வரும் 14, 15-ம் தேதிகளில் திருச்சியில் நடைபெறும் ஊர்வலம், மாநாடு பற்றிய பணிகளில் மிகவும் பிஸியாக இருந்தார் தமிழ் மாநில காங்கிரஸ் தலைவர் ஜி.கே. மூப்பனார். உற்சாகத்தோடு வரும் கட்சித் தொண்டர்களையும் தலைவர்களையும் இடைவிடாமல் சந்தித்துக் கொண்டிருந்த நிலையிலும் நமக்காகச் சிறிது நேரம் ஒதுக்கி, மாநாட்டின் நோக்கம் பற்றி விளக்கினார்...**

# "எங்கள் மாநாடு கூட்டம் சேர்ப்பதற்காக நடத்தப்படுவதல்ல!"

**கேள்வி** : மாநாட்டுக்காக அலங்கார வளைவுகள் அமைப்பது, கட்-அவுட்டுகள் வைப்பது போன்ற ஆடம்பரங்கள் கூடாது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். தமிழகத்தைப் பொறுத்தவரை இதுபோன்ற எளிமையான விஷயங்கள் கடைப்பிடிக்கப்படுவதில்லை என்கிற நிலையில், நீங்கள் மாத்திரம் இப்படிக் கூறியிருப்பது ஏன்?

**மூப்பனார்** : இது ஒரு முதல் முயற்சிதான்; புதுமுயற்சிதான்! அலங்கார வளைவுகள் அமைப்பதால் போக்குவரத்துக்கு மட்டும்தான் இடைஞ்சல் என்பதில்லை. நன்றாக இருக்கும் ரோடுகளில் குழிபறித்துத்தான் அலங்கார வளைவுகள் அமைக்க வேண்டியிருக்கிறது. மாநாடோ, விழாவோ முடிந்த பிறகு – அவை அகற்றப்பட்ட பிறகு – தோண்டப்பட்ட குழிகள் அப்படியேதான் இருக்கும். உடனடியாக சம்பந்தப்பட்ட நகராட்சியோ அல்லது மாநகராட்சியோ அதைச் சரிசெய்வதில்லை. அதனால் மாநாடு முடிந்த பிறகும் அந்தக் குழிகளால் மக்களுக்குத் தொல்லைதானே! இப்படியெல்லாம் மக்களுக்குத் தொந்தரவு தரக் கூடாது என்பதற்காகத்தான், அதெல்லாம் கூடாது; மக்களுக்கு இடைஞ்சலில்லாத வகையில் கொடிகளைக் கட்டுங்கள்; போஸ்டர்களை ஒட்டுங்கள் என்று அறிக்கை விட்டிருக்கிறேன். இருந்தபோதும் மாநாடு நடக்கிற விஷயம் மக்களுக்குப் போய்ச் சேர வேண்டும் என்பதால் விளம்பரங்களைத் தவிர்க்க முடியவில்லை! அப்படிச் சொல்லி விட்டதனாலேயே நூறு சதம் நான் சொன்னபடியே நடந்து விடும் – விமர்சனங்களுக்கு இடமில்லாத வகையில் நடந்து விடும் – என்றெல்லாம் நான் உறுதி கூறிவிடவும் முடியாது. இது முதல் முயற்சி தான் என்பதால், எனது அறிக்கையையும் மீறிச் சில தவறுகள் நடக்கலாம்; சில தடுமாற்றங்கள் நிகழலாம். என்றாலும் அந்தத் தடுமாற்றங்களைச் சரிசெய்து கொள்வோம்; தவறுகளைத் திருத்திக் கொள்வோம்.

**கேள்வி** : பெரும்பாலும் இதுபோன்ற ஊர்வலங்களையும் மாநாட்டையும் அரசியல் கட்சிகள் தங்களின் பலத்தை மக்களுக்கும் மற்ற கட்சிகளுக்கும் காட்டுகிற நோக்கத்தில்தான் நடத்துகின்றன. உங்கள் கட்சியைப் பொறுத்தவரை கடந்த தேர்தலில் பெற்ற மாபெரும் வெற்றியின் மூலம் உங்கள் பலத்தைக் காட்டி விட்டீர்கள். இந்த நிலையில் இந்த மாநாடு எதற்காக?

**மூப்பனார்** : நீங்கள் இப்படிக் கூறினாலும் 'இது தமிழ் மாநிலக் காங்கிரசா? தாற்காலிகக் காங்கிரசா?' என்று கூறியவர்களும் இருக்கத்தானே செய்கிறார்கள்! (சிரிக்கிறார்!) அப்படிப் பட்டவர்களுக்கெல்லாம் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கட்சி ஆரம்பித்து வெற்றி பெற்று விட்டோம். அதன் பிறகு ஒன்றுமே செய்யவில்லை என்கிற எண்ணம் வரக் கூடாதல்லவா! அதோடு கட்சித் தொண்டர்களெல்லாம் ஓரிடத்தில் கூடுகிற போதுதான் ஒருவருக்கொருவர் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ள முடி

கிறோம்...

**கேள்வி :** இல்லை... உங்கள் உணர்வுகளில் ஏதாவது வித்தியாசம்...

**மூப்பனார் :** என்ன...?

**கேள்வி :** அதாவது... இதுவரை நீங்கள் கலந்து கொண்ட மாநாடு



யும்! அப்போதுதான் வரப போகிற பஞ்சாயத்துத் தேர்தலுக்காக தொண்டர்களால் உற்சாகத்தோடு வேலை செய்யவும் முடியும். இந்த நோக்கங்களுக்குத் தான் மாநாடு நடத்தப்படுகிறது.

**கேள்வி :** இதுவரைக்கும் ஒரு தேசியக் கட்சியில் இருந்த நீங்கள் – தேசிய அளவில் நடந்த மாநாடுகளிலேயே கலந்து கொண்ட நீங்கள், இப்போது ஒரு மாநிலக் கட்சியின் தலைவராக – ஒரு மாநில அளவிலான மாநாட்டில் கலந்து கொள்ளப் போகிறீர்கள். இந்த நிலையில் உங்களுடைய உணர்வுகளில் ஏதேனும் வித்தியாசம் இருக்கிறதா?

**மூப்பனார் :** த.மா.கா. என்பது ஒரு மாநிலக் கட்சிதான். ஆயினும் முழுக்க முழுக்க மாநிலக் கட்சியாக மட்டுமே நாங்கள் நடந்து கொள்ள முடியாது. தேசியம் என்கிற பரந்த மனப்பான்மையுடன்தான் நடந்து கொள்வோம். அதனால் தான் 'வளமான தமிழகம்; வலிமையான இந்தியா' என்பதை எங்கள் கட்சியின் முக்கிய கொள்கையாகவும் கோஷமாகவும் வைத்திருக்களில் அனைத்திந்திய அளவிலான தலைவர்களோடு கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டிருப்பீர்கள். இப்போது தமிழகம் என்கிற ஒரு மாநில அளவிலான தலைவர்களோடுதான் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளப் போகிறீர்கள்...

**மூப்பனார் :** அனைத்திந்திய அளவில் செயல்பட்ட போது, முழுமையான சுதந்தரத்தோடு செயல்பட முடியாது. அதனால் முழுமையான பொறுப்புகளும் இருக்காது. இப்போதோ முழுச் சுதந்தரத்தோடு செயல்படுகிறேன். அதே சமயத்தில் பொறுப்புக்கள் என்கிற தலைச்சுமையும் அதிகம். அதனால் நல்லது நடந்தாலும் கெட்டது நடந்தாலும் அதற்கான முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டாக வேண்டும். அந்த வகையில் இதுவொரு புதிய முயற்சி மாத்திரமல்ல; புது அனுபவம் கூடத் தான்!

**கேள்வி :** தேர்தலுக்கு முன்பு தொண்டர்களிடம் இருந்த உற்சாகத்துக்கும் தேர்தல் வெற்றிக்குப் பிறகு தொண்டர்களிடம் இருக்கும் உற்



''பெரிய இடத்துல வேலை பார்த்த நம்ப முனியம்மா ரெண்டு நாளா ஒரு தினுசா இருக்காளே, கவனிச்சியா?''

''அவளோட குடிசைக்குப் பெரிய, பெரிய அதிகாரிகளெல்லாம் ஜீப் போட்டுக்கிட்டு ரெய்டுக்கு வந்தாங்கள்ல... அந்த கர்வம்தான்!''

– சீர்காழி. வி. ரேவதி



''புதுமைப் பெண் என்றால் அது நீதான் கமலா!''

''போதும் கிண்டல்! ரசத்துக்கு தெரியாமல் சர்க்கரை போட்டுட்டேன்!''

– உ. ராஜாஜி



''ஐந்தும் மூன்றும் எட்டு. ஐம்பதும் இருபதும் எவ்வளவு?''

''இந்தாங்க டீச்சர் கால்குலேட்டர்.''

– தேனி எஸ். மாரியப்பன்

சாகத்துக்கும் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா?

**மூப்பனார் :** தொண்டர்களின் உற்சாகம் இப்போது அதிகரித்திருப்பதைத்தான் பார்க்கிறேன். இன்னொரு புது அனுபவமும் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. அதாவது, 'இவர்களெல்லாம் தேர்தல் காலத்தில் மட்டும் வோட்டுப் போடுபவர்கள்தான்; மற்றபடி அரசியலிலெல்லாம் அவர்களுக்கு ஈடுபாடு இல்லை' என்று சமுதாயத்தின் ஒரு பிரிவினரைப் பற்றி எப்போதும் ஓர் எண்ணம் உண்டு. இன்று அது மாறிப் போயிருக்கிறது. அவர்களெல்லாம் வந்து என்னைச் சந்திக்கிற போது, 'நாங்களும் கட்சியில் சேர ஆர்வமாக இருக்கிறோம்; உறுப்பினர்களைச் சேர்க்கச் சொல்லுங்கள்!' என்று கேட்கிறார்கள். மெத்தப் படித்தவர்கள், தொழில் செய்பவர்கள் போன்றவர்களெல்லாம் இப்படி அரசியலில் ஆர்வம் காட்டுவது எனக்குப் புதுமையான அனுபவம் மட்டுமல்ல; அதிசயமான அனுபவமாகவும் இருக்கிறது.

**கேள்வி :** இதுவரை எத்தனை உறுப்பினர் ஃபாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன?

**மூப்பனார் :** இருபத்தைந்து லட்சம். இன்னும் அதிகமாகக் கேட்கிறார்கள். இவர்களெல்லாம் இந்தக் கையில் ஒரு கையெழுத்து, அந்தக் கையில் ஒரு கையெழுத்து என்று போட்டு உறுப்பினர்களாகச் சேருபவர்கள் அல்ல; நிஜமாகவே இந்த இயக்கத்தின் மேல் நம்பிக்கை வைத்துச் சேருபவர்கள்.

**கேள்வி :** தேர்தலையொட்டித் திருச்சியில் நடைபெற்ற அ.தி.மு.க., தி.மு.க. மாநாடுகளில் கூடிய கூட்டத்தை விட அதிகமாகக் கூடினால் தானே உங்கள் கட்சிக்குப் பெருமை என்று நீங்கள் நினைக்கவில்லையா?

**மூப்பனார் :** அவர்கள் 24 மணி நேரம் ஊர்வலம் போனார்கள்; இவர்கள் 28 மணி நேரம் ஊர்வலம் போனார்கள்... அதனால் நாம் 32 மணி நேரம் ஊர்வலம் போனால்தான் பெருமை – செல்வாக்கு என்றெல்லாம் நான் நினைக்கவில்லை. யாரோடும் போட்டி போடுவதற்காகவும் நாங்கள் இதை நடத்தவில்லை. உண்மையிலேயே தமிழ் மாநிலக் காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சியில் அக்கறையுள்ளவர்கள் – அபிமானமுள்ளவர்கள் தாங்களாகவே விரும்பி வந்தால் போதும். அப்படி உண்மையிலேயே விரும்பி வருபவர்களின் கூட்டம் அதிகமாக இருந்தால் சந்தோஷம்தான். குறைவாக இருந்தாலும் நான் ஒன்றும் வருத்தப்படமாட்டேன். அப்படியிருந்தால் இந்த மாநாடு எளிமையான முறையில் நடக்க வேண்டும் என்று நான் அறிக்கை விட்டிருக்க வேண்டிய அவசியம் இல்லையே!

பேட்டி : **இளங்கோவன்**

படங்கள் : **யோகா**




# ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி பர்மனென்ட் பண்டு லிமிடெட்

**மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம்**

H.O. No. 288, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை - 7 Ph : 6421801/6415549
B.O. No. 23, வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை - 4. Ph : 4934009



## பிக்சட் டிபாசிட்

| 45நாள் | 90நாள் | 6மாதம் | 1ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

## கனகதாரா டிபாசிட்

ரூ. 50,000/- முதலீடு செய்வீர் 10ஆம் ஆண்டு முடிவில் ரூ. 50,000/- பெறுவீர் அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில் ரூ. 1 கோடி பெறுவீர்

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

## PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

## செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | 15 Yrs | Rs.1,50,000 |

## பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதாமாதம் ரூ. 100/- | 25 Yrs | Rs.3,00,000 |

## மறுமுதலீட்டுத் திட்டம்!

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12மாதம் | 24மாதம் | 45மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |

## வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ. 3450/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ. 2 லட்சம் பெறுவீர்.

பென்ஷனர் நலத் திட்டம் 20% **P.a.**
ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் : காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன்பெறலாம்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

சென்னை மாநகர சொத்துக்கள் மீது கடன் கிடைக்கும்

நகைக்கடன் கிராம் 1க்கு ரூ. 300 மாதவட்டி ரூ. 1.95 மட்டும் வேறு கட்டணம் இல்லை

H.O. வெள்ளி விடுமுறை B.O. செவ்வாய் விடுமுறை

வேலை நேரம் : காலை : 8.30 - 12.30 மாலை : 2.00 - 6.00



சேர்மன்:P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தக்கோட்டம், சென்னை-600 003.

**PB குரூப் கம்பெனி**

அருளுக்கு ஸ்ரீ முத்துக்குமரன்! பொருளுக்கு PB குரூப் நிறுவனம்!

☐ Transactions with Members only ☐ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும்

27.4.1996 அன்று கல்யாண பொன் விழா கண்ட தம்பதியர்

**திரு. M.A. சுவாமிநாத ஐயர்**

**திருமதி S. சாரதாம்பாள்**

அவர்களுக்கு எங்கள் வணக்கங்கள்.



**இங்ஙனம்**

திரு. திருமதி சங்கரன்.
திரு. திருமதி லட்சுமணன்
திரு. திருமதி விஸ்வநாதன்
திரு. திருமதி காசிநாதன்
திரு. திருமதி ஜகன்னாதன்

திரு. திருமதி சௌதா வெங்கடரமணன்
எஸ். உமா
லட்சுமி கிருஷ்ணமூர்த்தி
மற்றும்
பேரன் பேத்திகள்



தூய்மையான ஆட்சியைத் தர வேண்டும் என்று நினைத்துச் செயல்படும் முதல்வருக்கு வெளியிலிருந்துதான் சவால்கள் வரும் என்பதில்லை; அரசுக்குள்ளிருந்தும் கட்சிக்குள்ளிருந்துமே சவால்கள் வருகின்றன....

# நல்லாட்சிக்குச் சவால் விடும் அதிகாரிகள், எம்.எல்.ஏக்கள்!

'முதல்வரின் அலுவலகத்துக்கு நேரடியாகத் தகவல் கொடுத்தால் புகார்கள் உடனடியாகக் கவனிக்கப்படுகின்றன' என்பது ஒரு நல்ல செய்தி.

இதை உறுதிப் படுத்தும் விதமாக, "முதல்வரின் அலுவலகத்துக்கு 'இருபது நாட்களில் ஒன்னரை லட்சம் மனுக்களாமே...?' என்று கேள்வி எழுப்பிய மனுக்களில் என்னுடைய மனுவும் ஒன்று! என்ன ஆச்சரியம், கலைஞர் அறிவித்தபடியே முப்பது நாள் முடியும் முன்னே பரிசிலித்து, பரிந்துரைக்கப்பட்டு, ஆவன செய்யப்பட்டு விட்டது. பாராட்டுவோம் பதவியிலிருப்போரை!" என்று காட்டூரைச் சேர்ந்த கல்வி வாசகியான எஸ்.அருள் மொழியும் நமக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்.

இந்தச் செய்திக்கு ஒரு மறுபக்கமும் இருக்கிறது என்பதை சமீபத்தில் பலர் அனுபவித்து உணர்ந்திருக்கிறார்கள்.

சென்ற மாதம் சென்னையில் பெய்த பயங்கர மழையால் சாலைகளில் தண்ணீர் தேங்கி, சாக்கடை நீர், குடிநீரோடு கலந்து போய் ஏகப்பட்ட கலாட்டாவாகிவிட்டதல்லவா......! அந்த சமயத்தில் மாம்பலம் ரயில்வே ஸ்டேஷனை ஒட்டிய பாபு ராஜேந்திர பிரசாத் ரோடு முழங்கால் அளவு தண்ணீரில் மூழ்கிக் கிடந்தது. மாநகராட்சிக்குப் போனிலும் நேரில் சென்றும் பலமுறை தகவல் தந்தும் எதுவும் நடக்கவில்லை என்பதால் அப்பகுதிவாசி ஒருவர் முதலமைச்சர் புகார் பிரிவில் மனு கொடுத்துவிட்டார். அங்கிருந்து உடனடி நடவடிக்கை எடுக்கும்படி மாநகராட்சிக்கு உத்தரவு போனது. உத்தரவின் நகல் ஒன்றும் புகார் செய்த நபருக்கு அனுப்பப்பட்டது. அந்த நகலுடன் மாநகராட்சி அலுவலகம் போனவருக்குச் சரியான வரவேற்பு!

"முதல்வர் அலுவலகத்துக்குச் சொல்லிட்டா காரியம் நடந்திருமா...? முதல்வரா வந்து சுத்தம் செய்வார்? நாங்க மனசு வைச்சாத்தான் காரியம் நடக்கும்..." என்றெல்லாம் அங்கிருந்த அலுவலர் சாடியிருக்கிறார்.

கிட்டத்தட்ட இதே போன்றதொரு அனுபவம் இன்னொரு பொதுஜனத்துக்கு... நீண்ட நாட்களாக அனுபவித்து வரும் ஒரு நிலத்தை முறைப்படி பட்டா செய்து தரும்படி அவர் பல காலமாகக் கேட்டு வந்தார். அரசு தரப்பில் எதுவும் அசையவில்லை. புதிய ஆட்சி அமைந்த பின் முதல்வரின் புகார் பிரிவுக்கு மனு போட்டிருக்கிறார். சில நாட்கள் சென்று, சம்பந்தப்பட்ட அரசு அலுவலகத்தை அணுகி தமது பட்டா விஷயமாகக் கேட்டால்.... "முதல்வர் அலுவலகத்தில பெட்டிஷன் கொடுத்தீங்க! வெரிகுட்.... உங்க ஃபைல், ஒண்ணு அடியில போயிடும். இல்லைன்னா, காணாமல் போயிடும்!" என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லிவிட்டு, சப்தமாகச் சிரித்திருக்கிறார் அந்த அதிகாரி!

முன்னாள் தலைமைச்செயலாளர் ஹரி பாஸ்கரை தாற்காலிகமாக வேலைநீக்கம் செய்ததும் அவர் உடனே, தம்மை இப்படித் தாற்காலிக வேலை நீக்கம் செய்தது தவறு என்று டிரிபியூனலுக்கு நீதி கேட்டுப் போயிருக்கிறார். இது தெரிந்த விஷயம். இந்த நிலையில் இவர் பற்றி அரசு உயர் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற ஓர் அதிகாரி சொன்னது:

"சமீபத்திய சமாசாரமெல்லாம் இருக்கட்டும், ஹரிபாஸ்கர் தமிழ்நாடு மின் வாரியத்தின் சேர்மனாக இருந்தபோது, பயணப்படியாக சுமார் ஒரு லட்சத்து எழு பத்தைந்தாயிரம் ரூபாயை அட்வான்ஸாக வாங்கினார். அந்தத் தொகைக்கு இன்றுவரை அவர் கணக்குக் கொடுத்ததாகத் தெரியவில்லை!"

இதெல்லாம் அரசாங்கத்துக்கு மட்டும் விடப்படுகிற சவால்களா, என்ன? நேர்மைக்கும் சேர்த்தல்லவா இவர்கள் சவால் விடுகிறார்கள்!

இத்தகைய அதிகாரிகள் ஒரு பக்கம் புதிய ஆட்சிக்குச் சவால் விட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்றால் எம்.எல்.ஏக்களில் சிலரும் 'எங்கே, எப்போ' என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். கடந்த காலத்தில் கொஞ்சம் பணம் பண்ணிய அனுபவம் இந்தச் சிலருக்கு இருப்பதால், இப்போது கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பது சிரமமாகத்தான் இருக்கும். போதாக் குறைக்கு நடந்து முடிந்த ஆட்சியின் ஏராள லஞ்ச ஊழல்கள் அம்பலத்துக்கு வரவர, அச்சத்தை ஏற்படுத்துவதற்குப் பதில் ஆசையை விதைத்துக் கொண்டேயிருக்கின்றன; துணிச்சலைத் தூண்டுகின்றன.

ஆட்டோ ஓட்டியான ஒரு தி.மு.க. தொண்டர், சென்னை நகரத் தொகுதிகள் ஒன்றின் எம்.எல்.ஏ. பெயரைக் குறிப்பிட்டே சொல்கிறார்: "நம்மாளுகிட்டேருந்து ஓ.கே. கிட்ட மாட்டேங்குது; கிட்டுனா பாலத்தடியில் கடை போட்டுடலாம்; பிச்சிக்கினு போகும்."

கடை என்று அவர் குறிப்பிடுவது எதை என்று விளக்கத்தேவையில்லை. "கேட்டா நகராட்சித் தேர்தல் முடியட்டுங்கிறாரு" என்கிறார் அந்த ஆட்டோ ஓட்டி. வேறு சிலர் ஆறுமாதமாவது ஆகட்டும் என்றும் காத்திருக்கலாம்!

சென்னை நகரின் மற்றொரு தொகுதி எம்.எல்.ஏ. சமீபத்திய மழையின்போது, குடிசைவாசிகளுக்கு உணவு வழங்க வேண்டும் என்பதற்காகவே அந்த வட்டாரத்து வசதி படைத்த மக்களிடம் வசூல் வேட்டை நடத்தியிருக்கிறார். அவரால் கட்டாயப்படுத்தப் பட்டவர்கள், "சிவ சிவா, அரசு அல்லவோ வீடிழந்த மக்களுக்கு உதவப்போவதாக நினைத்துக் கொண்டிருந்தோம்" என்று அலுத்துக் கொண்டே நோட்டுப் பிரித்திருக்கிறார்கள்.

'இப்படி கிசுகிசு பாணியில் எழுதினால் எப்படி? ஆதாரத்துடன் குற்றம் சாட்டினால் தானே நடவடிக்கை எடுக்கலாம்?' என்று சிலர் பாய்வதற்கு இதற்குள் தயாராகியிருப்பார்கள்.

ஆனால் நாம் எழுதுவது கலைஞர், களை எடுக்க வேண்டும் என்பதற்காக அல்ல. 'மனத்தில் களை முளை விடும்போதே கிள்ளி எறிந்து விடுங்கள்' என்று சம்பந்தப்பட்டவர்களைக் கேட்டுக் கொள்வதற்காக. நல்லாட்சி வழங்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு இருக்கும் முதல்வருக்கு அதிகாரிகளும் எம்.எல்.ஏக்களும் தங்கள் சுறுசுறுப்பாலும் ஒழுக்கத்தாலும் முழு ஒத்துழைப்புத் தரவேண்டும்.

ஒரு குடம் பாலைப் பாழாக்க ஒரு துளி விஷம் போதும் என்பதை மறக்கக் கூடாது.

- கௌசி



## கடைசி சந்திப்பு!

சமீபத்தில் டெல்லி போயிருந்த போது நியூ டெல்லி டெலிவிஷன் அலுவலகத்தில் அதன் பிரதம செய்தி ஆசிரியர் அப்பன் மேனனைச் சந்தித்தேன். சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டே சிரித்தபடி பேசினார். திடீரென்று ஜூன் 28ஆம் தேதி அவர் காலமானது பேரதிர்ச்சி. அந்த கடைசி சந்திப்பில் அவர் பேசியவை:

"என்.டி.டி.வியின் 'இந்தியா வோட்ஸ் '96' நிகழ்ச்சிக்கு நல்ல வரவேற்பு இருந்தது. 530 சொச்சம் கவுண்டிங் சென்டர்களிலும் எங்கள் பிரதிநிதிகள் இருந்தார்கள். வோட்டு எண்ணிக்கை விவரங்களை உடனுக்குடன் எங்களுக்குத் தெரிவித்தார்கள். மேற்கு வங்க முடிவுகள் வெளியாகிக் கொண்டிருந்தபோது, இங்கே ஹர்கிருஷன் சுர்ஜித் கமெண்டுகள் கூற காத்துக் கொண்டிருந்தார். நாங்கள் வேறு மாநில முடிவுகளில் மூழ்கி, இவர் பக்கம் திரும்புவதற்குள், அவர் பொறுமை இழந்து, புறப்பட்டுப் போய்விட்டார்! எல்லா அரசியல்வாதிகளின் பொறுமையையும் நன்றாகச் சோதித்துவிட்டோம். ஹெக்டே மட்டும் ரொம்பப் பொறுமையாக இருந்தார்! தூர்தர்ஷனின் உதவி இல்லாமல் இத்தனை பிரம்மாண்டமான இந்த நிகழ்ச்சியை வழங்கியிருக்க முடியாது!"

முழுக்க முழுக்க கம்ப்யூட்டரில் செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் வைத்திருந்தார் அப்பன் மேனன். உலகின் மூலை முடுக்கில் இருந்தெல்லாம் வரும் செய்திகள் கம்ப்யூட்டர் திரையில் ஓடிய போது, தேவையானவற்றை மட்டும் எடுத்துக் கொண்டு பிற தகவல்களையும், படத் தொகுப்புகளையும் சேமித்து வைத்தார். உலகின் பல பகுதிகளிலிருந்து வெளியாகும் ஆங்கில தினசரிகள் கட்டுக்கட்டாக அலுவலகத்தை நிறைத்தன!

சந்திப்பு முடிந்து விடை பெறும் போது "எங்கள் நியூடெல்லி டெலிவிஷன் பற்றி ஏதாவது கல்கியில் எழுதினால், தவறாமல் எனக்கு ஒரு பிரதி அனுப்பி வையுங்கள்!" என்றவரை வியப்புடன் பார்த்தேன்.

"எனக்குத் தமிழ் தெரியாவிட்டாலும் தமிழ் தெரிந்தவர்களிடம் படிக்கச் சொல்லிக் கேட்டுக் கொள்வேன்" என்றார்.

அப்படிப்பட்ட அவர், 49 வயதில் தூக்கத்திலேயே இறந்து போனதைச் செய்தியாகப் படிப்பேன் என்று அப்போது துளியும் நினைக்கவில்லை...

- சாருகேசி

# வாழ்க மணமக்கள்



வல்வெட்டித் துறையைச் சேர்ந்த திரு. எஸ். வைரமுத்து (சித்தப்பா) அவர்களின் பேரனும் திரு. க. வைத்தீஸ்வரனின் புதல்வனும் ஆகிய அன்பழகன் (பொறியிலாளர், லண்டன்) அவர்கட்கும், வல்வெட்டித் துறையைச் சேர்ந்த டாக்டர் A.S. சத்தியசீலன் அவர்களின் புதல்வி நர்மதாவுக்கும் 6.6.1996 அன்று சென்னையில் திருமணம் இனிதே நடந்தேறியது.

டச்-அப் தண்டபாணியை உங்களுக்குத் தெரியாது. கோடம்பாக்கம் ஸ்டுடியோ வட்டாரங்களில் அவன் கைவண்ணம் காட்டாத நட்சத்திர முகங்களே கிடையாது. மேக்-அப் போடுகிறபோதே பேச்சுக் கொடுத்து விஷயங்களைக் கறந்து விடுவதில் விற்பன்னன். அங்கவஸ்திரம் மாதிரி முழம் நீள பான்பராக் வாங்கிக் கொடுத்தால், உச்சி குளிர்ந்து, உளறத் தொடங்கி விடுவான். நேற்று மத்தியானம் கற்பகம் ஸ்டுடியோ வாசலில் பார்த்து, "என்ன தண்டம், சவுக்கியமா?" என்றேன்.

"த பார்! முழுப்பேர் சொல்லிக் கூப்பிடறதுன்னா கூப்பிடு. இல்லாங்காட்டி நேனு கொட்டேஸ்தானு" என்றான்.

"உள்ள எதாவது தெலுங்கு ஷூட்டிங் நடக்குதா?" என்றேன்.

"ஷூட்டிங் நடந்தாத்தானா? பேச்சு வார்த்தை!"

"யாருக்கும் யாருக்கும்?"

"அதெல்லாம் உனக்கு வேணாம். வந்த விஷயத்தைச் சொல்லு!" என்றான் கறாராக.

"ஒண்ணுமில்லை. உன்னைப் பார்த்து நாளாச்சேன்னுதான் வேகாத வெயில்ல வந்தேன்" என்றபடி பாக்கெட்டிலிருந்து பாக்குப் பொட்டலத்தை மெல்ல வெளியே எடுத்தேன்.

"ஐ!" என்று திருட்டு விழி விழித்தவன், "தெரியுமா சேதி? ரோஜா, ப்ரொட்யூஸராவுது!" என்றான்.

"சரிதான், ஓல்டு நியூஸ். அதான் விஜய சாந்தி ஸ்டைலில் தெலுங்குப் படம் எடுக்கறதா நியூஸ் வந்ததே?"

"அது முடிஞ்சு போச்சு! இப்ப தமிழ்ப்படம்."

"ஐயோ பாவம். ஹீரோ யாரு? செல்வமணியா?"

"நீ உதைபடுவே. அவர் டைரக்ட் பண்ணுவாராயிருக்கும். அர்ஜுன் அல்லது சரத்குமார்" என்றான்.

"சரியாச் சொல்லு. அர்ஜுனா? சரத்குமாரா?"

"அதான் பேசிக்கிட்டிருக்காங்க. அர்ஜுனுக்கு சிட்டி சைடுல நல்ல வரவேற்பு. பி அண்ட் சி யில சரத்குமாருக்கு நாலு வாரம் ஹவுஸ்ஃபுல் கேரண்டி. எது ஒர்க் அவுட் ஆகும்னுதான் யோசனை. தவிர, தெலுங்குலயுமா சேர்த்து எடுக்கப்போறதாப் பேச்சு."

"இதெல்லாம் விஷயமா? அவங்களுக்கு எப்ப கல்யாணமாம்? கேட்டியா?"

"காதைக் கொடு. குஷ்பு கல்யாணத்துக்காக வெயிட் பண்ணிட்டிருக்காங்க."

"அட, அதென்ன?"

"ஒரு டைரக்டரைக் கல்யாணம் கட்டிக்



கிட்டா என்னென்ன மாதிரி பிரச்னை வரும்னு தெரிஞ்சிக்கிட்டு, அதுக்குத் தகுந்தாப்பல நடந்துக்கலாம்னு ஐடியாவாம்."

"அம்மாடியோவ்!"

"குஷ்பு அக்காவப் பாக்கறப்போ எல்லாம் எப்ப கல்யாணம்னு ஆசையா விசாரிக்கறாங்களாம்."

"ஆனா, குஷ்புவுக்கு இப்போதைக்குப் பத்துல குரு வரப்போறதா இல்லை."

"புரியற மாதிரிப் பேசுறா."

"கல்யாணம் பக்கத்தில வரலைங்கறேன்."

"ஏனாம்?"

"சுந்தர், ரஜினி படம் டைரக்ட் பண்ணப் போறார் இல்லை? அது முடிஞ்சப்புறம்தான்."

"சர்தான். ரஜினி ஒரு ஆளை வெச்சு எத்தனை மீட்டர் வுடறீங் கப்பா? சுந்தர் டைரக்‌ஷன்னு கொஞ்சநாள், சுரேஷ் கிருஷ்ணா தான்னு கொஞ்சநாள், பாவாஜி ப்ரொட்யூசர்னு கொஞ்சநாள், நாகிரெட்டி தான்னு கொஞ்சநாள்... நீ வேணா பாரு. எஸ்.பி. முத்து ராமன் டைரக்‌ஷன்ல, பஞ்சு அருணாசலம் படம்னு அடுத்தவாரம் தினத்தந்தில வரப்போகுது."

"அட, அப்படிக் கூடப் பேசிக்கிட்டாங்கப்பா. ஆனா, இதான் லேட்டஸ்ட் அண்ட் கன்ஃபார்ம்டு நியூஸ். ரஜினி, உள்ளத்தை அள்ளித்தா பார்த்துட்டு ரொம்ப குஷி ஆயிட்டாப்ல. இதே மாதிரி டோட்டல் காமெடி சப்ஜெக்ட் ஒண்ணு பண்ணிக் கொண்டுவா, ஆரம்பிச்சிடுவோம்; ஆனா ஒண்ணு. அரை சென்ட்டி மீட்டர் கூட பாலிடிக்ஸ் வரக்கூடாதுன்னு கண்டிஷனா சொல்லி இருக்கார். அதே மாதிரி, இந்தி உல்டாவெல்லாம் வேணாம்னும் ரூல்."

"சபாஷ். சரியான போட்டி."

"என்ன போட்டி?"

"கமல் வேற முழு காமெடிப்படம்தானே பண்றார்? அவ்வை சண்முகி?"

"அது சரி. ஆனா ஒரே வித்தியாசம். அவ்வை சண்முகி மூணு சமாசாரத்தோட உல்டா."

"என்னது?"

"'மிஸஸ் டவுட் ஃபயர்னு' ஒரு படம் வந்திச்சில்ல? அதான்பா, ஒரு குண்டு பொம்பளை படம் போட்டு, ஃப்ளை ஓவர் கிழே எல் லாம் போஸ்டர் ஒட்டி இருந்துச்சே, அது. அப்புறம் 'டுட்ஸி'ன்னு ஒருபடம். இதுங்ககூட கிரேஸி மோகனோட 'மீசை ஆனாலும் மனைவி' நாடகம். மூணையும் போட்டுப் பிசைஞ்சி, பரோட்டா போடறாங்க."

"போவட்டும். என்ன இருந்தாலும் கிரேஸி மேல கமலுக்கு ஒரு இதுதான்."

"இல்லாமயா பின்ன அடுத்த படத்தை டைரக்ட பண்ணச் சொல்லி இருப்பார்?"

"என்னது?"

"ஆமா! ஔவை முடிஞ்சதும் ஒரு சீரியஸ் படம் பண்ணிட்டு, அடுத்தபடியா கிரேஸி மோகன் டைரக்‌ஷன்ல நடிக்கப் போறார், கமல்."

"உடான்ஸ் வேணாம் தண்டபாணி."

"ங்கொப்புறான, இது நடக்கலைன்னா நான் பான்பராக்கை விட்டுடறேன்."

"பார்க்கலாம், வரட்டா?"

"ஒரு பொண்ணு, கமலோட நடிக்கறதுக்காக, மொட்டை போட்டுக்கத் தயார்னு சொல்லி, பம்பாய்லேர்ந்து வந்திருக்கு! அடுத்த தபா பார்க்கறப்போ விளக்கமா சொல்றேன்."

**— கிச்சா**



தளபதி : ஆயிரம் மனைவிகளையும் அந்தப்புரத்துல ஒண்ணா வைக்காதீங்கன்னு படிச்சி படிச்சிச் சொன்னேனே... கேட்டீங்களா?

மன்னன் : இப்ப அதுக்கு என்னய்யா?

தளபதி : என்னவா? அவங்க எல்லோரும் சேர்ந்து உங்களைக் கவுத்துட்டு கூட்டணி ஆட்சி நடத்தப் போறாங்களாம்!

**— பி.ஜி.பி. இசக்கி**



''நீதிபதி இன்னும் 15 - நாள்ல ரிடையர் ஆகப் போறாராம்.''

''அதான் அந்த பெரிய இடத்து வழக்கை 16 - நாள் ஒத்தி வச்சிருக்கிறதா சொல்லிட்டாரா?''

**— சீர்காழி வி. ரேவதி**

# குறையொன்றுமில்லை

## 9

வேதம் என்ற சொல்லுக்கு உணர்த்துதல் என்று அர்த்தம். பரப்ரும் மத்தை உணர்த்துவதனாலே அது வேதம். இதையே தமிழில் 'மறை' என்கிறோம். மறைப்பதனாலே அதற்கு மறை என்று பொருள்!

சமஸ்கிருத அர்த்தத்துக்கு தமிழ் அர்த்தம் முரணாக நமக்குத் தோன்றுகிறதல்லவா...? இந்த 'முரண்டுபாடு' கண்டு நாம் பிரமித்துப் போய்விடக் கூடாது. ஏனென்றால் சமஸ்கிருதத்தில் சொல்லப்பட்டதைத்தான் தமிழ் மேலும் வலியுறுத்திச் சொல்கிறது.

பரப்பிரும்மத்தை உணர்த்துவதனால் வேதம்.

பரப்ரும்மத்தைத் தன்னுள்ளே மறைத்து வைத்திருப்பதனாலே அது மறை!

வேதமானது யாருக்கு மறைக்கிறது... யாருக்கு பரப்ரும்மத்தைக் காட்டுகிறது...?

ஆசார்ய கடாக்ஷம் அற்றவருக்கு மறைக்கிறது. ஆசார்ய கடாக்ஷம் பெற்றவருக்கு பரப்ரும்மத்தை அதுவே உணர்த்துகிறது.

பளிங்குக் கற்களால் தயார் பண்ணப்பட்ட திவ்யமான ஒரு மாளிகையிலே நான்கு பக்கமும் தேதிவ்யமாய் விளக்குகளை ஏற்றி வைத்து, அந்த மாளிகைக்கு இடையிலே நவநிதிகளையும் கொண்டு கொட்டினால், அது எப்படி தகதகாயமாய்ப் பிரகாசிக்குமோ, எல்லாருக்கும் எப்படிப் பளீரென்று புலப்படுமோ, அந்த மாதிரி... ஆசார்ய கடாக்ஷம் பெற்றவர் வேதத்தைப் பார்த்தாரானால், அதற்குள்ளே இருக்கக்கூடிய புரியாத விஷயங்கள் கூட கலபமாக அவருக்குப் புரியும். சாமானியர்



களுக்கும் இந்த மாதிரி புரிய வைக்கக் கூடியது மகான்களின் அனுக்கிரஹம்.

இந்த வேதம் ஓதி யக்ஞம் செய்யப்படும்போது, பூரணமாய் ஆயுள் உண்டாகவும், இறுதிவரையிலே பார்வையும் செவிப்புலனும் சித்திக்கவும், மனசு சலிக்காமல் இருக்கவும் வாக்கிலே எப்போதும் தேன் சிரமிக்கவும் அனுக்கிரஹமாகிறது.

வாக்குக்கான இந்த்ரியம் நாக்கு. அது பற்களைப் பார்த்துக் கேட்கிறது:

''கடுமையான விஷயங்களைப் பொடியாக்கி எனக்குக் கொடுக்கிறீர்களே... நான் உங்களுக்குக் கடைமைப்பட்டுட்டேனே... என்ன பண்ணினால் உங்களுக்குப் பிரதியுபகாரமாய் இருக்கும்? அதை நீங்கள் சொல்ல வேண்டும்...''

அதற்கு முப்பத்திரண்டு பற்களுமா பதில் சொன்னதாம்:

"நீ ஒண்ணும் உபகாரம் பண்ண வேண்டாம். பகவான் உன்னை எப்படி வைச்சிருக்கான்னு எண்ணிப் பாரு... அதை உணர்ந்து செயல்பட்டாலே போதும்."

"எப்படி வைச்சிருக்கான்?" என்றது நாக்கு.

''உன்னை உள்ளே வைத்து, எங்களை வெளியே வைச்சிருக்கான். இதனோட தாத்பர்யம் என்ன...? எங்களைத் தாண்டி நீ வெளியே வரக்கூடாது. கட்டுப்பட்டு இருக்கணும்ன்றது பகவானின் சங்கல்பம். அப்படி இருந்துட்டா துன்பம் ஒண்ணுமில்லை...''

– பற்களின் இந்த பதிலைக் கேட்ட நாக்கு வருத்தப்பட்டது: "என்னை இப்படி நிஷ்டூரமா சொல்கிறீர்களே! நான் வெளியில் வந்தால் என்ன?"

"நீ வெளியே வந்தால் எங்களுக்குத்தான் கஷ்டம். எதிரேயுள்ளவன் உன் பேச்சைக் கேட்டு என்ன சொல்வான்..? 'உன் நாக்கை அடக்குவேன்' என்று சொல்வதில்லை எதிராளி... 'பல்லை உடைப்பேன்' என்றுதான் சொல்கிறான்! அதனால் எங்களுக்குக் கட்டுப்பட்டு இரு'' என்றன பற்கள்!





இது கலியுக தர்மம்! கலியுகத்திலேதான் தப்பை ஒருத்தன் பண்ணினாலும் சிக்ஷை இன்னொருத்தனுக்கு! எனவே நமக்கு வார்த்தைகள் மிகும்போதெல்லாம் இந்த சம்பாஷணை நினைவு வர வேண்டும். அடங்கிவிடுவோம்.

வாக்கு நமக்கு நல்லவிதமாய் அமையணும் என்றால், நாமாக அதைப் பெற்று விட முடியாது. யக்ஞங்கள்தான் நல்ல வாக்கை உண்டாக்கித்தர வேண்டும்.

வாக்கு மட்டுமல்ல, புலன்கள் யாவும், ஆத்மாவும்கூட யக்ஞத்தினாலே ரக்ஷிக்கப்படுகின்றன.

**ய**க்ஞம் என்ற சொல்லால் எது மறைத்துச் சொல்லப்படுகிறது என்று பார்த்தால், அந்த பரமாத்மாதான் மறைத்துச

சொல்லப்படுகிறார். விஷ்ணுதான் யக்ஞன்- யக்ஞ சாகரன், யக்ஞரூபி, யக்ஞபுருஷன். எல்லாவற்றையும் அவன் உண்டாக்கித் தரட்டும் என்று வேதம் சொல்கிறது.

யக்ஞம் என்ற பதத்தினாலே நாம் அறிந்து கொள்பவர் பரமாத்மா. அதே போல்தான் மந்திரங்களுக்குத் துல்லியமாய் இருக்கக் கூடிய சஹஸ்ரநாமத்திலே, விச்வம் என்கிற சொல். வெளியே காணக்கூடிய உலகம் என்று கருத்து தென்பட்டாலும் அது நாராயணனையே உணர்த்துகிறது. விச்வ சப்தத்தினாலே உணர்த் தப்படுகிறவன் நாராயணனே.

'நாராயண' என்ற சொல்லுக்கு நாம் பொருள் உணர வேணும். விஷ்ணு புராணத் திலே 'தீர்த்தம்' ஜலம்- இவற்றுக்கு நாரங்கள் என்று அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

நாரம் ததாதீ நாரத: – பித்ரு தேவதைகளை ஏராளமாக தர்ப்பணம் பண்ணி ஆராதித்தார் என்பதாலே அவருக்கு நாரதர் என்று பெயர்- தீர்த்தத்தை நிறைய, பித்ரு தேவதைகளுக்குக் கொடுத்தவர்.

'நாரம்' என்றால் ப்ரும்ம ஞானம் என்றும் ஓர் அர்த்தம் உண்டு. ப்ரும்ம ஞானத்தை அனவரதம் உபதேசித்தவர் நாரதர். பரப்ரும் மத்தைத் தவிர மற்றொரு விஷயம் பேசமாட் டார் அவர்.

சிருஷ்டிக் கிரமத்தில், தக்ஷபிரஜாபதி என்பவர் ஹரியச்வரர்கள் என்று விசேஷமாக பத்தாயிரம் பேரை சிருஷ்டி பண்ணினார். அந்த பத்தாயிரம் பேரையும் உட்கார வைத்து, நாரதர், 'இந்த சிருஷ்டி உலகம் எதுக்கு? பரப் ரும்மத்தை அடைய வேண்டாமா...?' என்று உபதேசம் பண்ணினார்.

உடனே, அத்தனை பேரும் பரப்ரும்மத்தை தியானம் பண்ணி மோட்சத்துக்குப் போய் விட்டார்கள்! சிருஷ்டியே நடக்கவில்லை...!

இன்னொரு ஆயிரம் பேரை சிருஷ்டித்தார் தக்ஷபிரஜாபதி. நாரதர், அவர்களுக்கும் உபதேசம் பண்ண, அவர்களும் மோட்சத்துக் குப் போனார்கள்!

பார்த்தார் தக்ஷபிரஜாபதி! 'நாம சிருஷ்டிக் கறது... இவர் மோக்ஷத்துக்கு வழி பண்றதா...' என்று கோபித்துக் கொண்டு நாரதருக்கு ஒரு சாபம் கொடுத்தார்:

'நின்றவா நில்லா நெஞ்சம் போல்' அவர் அலைந்த வண்ணம் இருக்கக்கடவது என்று சாபம்! மனசு எப்படி ஓர் இடத்திலே நிற் காதோ... அப்படி நிற்காமல் போய்க் கொண்டேயிருக்க வேண்டும் என்று சாபம்!

அதனால்தான் நாரதர் ஒரு க்ஷணம்கூட ஒரு இடத்தில் இருக்க மாட்டார். அவர் எங்கேயாவது ஒரு நிமிஷம் தங்கினால், அங்கிருப்பவருக்கு மோக்ஷ சித்திதான்!

**நா**ரம் என்றால் தீர்த்தம் என்று சொல் லப்போக, தீர்த்தம் கொண்டு தர்ப்பணம் செய்த நாரதரின் கதையைச் சொன்னேன். தீர்த்தத்தை எவனொருவன் படுக்கையாக- தன் இருப்பிடமாகக் கொண்டானோ.. அவனுக்கு நாராயணன் என்று பெயர்.

ஒருவர் சமத்காரமாக பகவானை ஸ்தோத் திரம் பண்ணியிருக்கிறார்- சிலேடை என்று அதைச் சொல்வது:

பூர்வ காலத்திலே பழையது சாப்பிடுவது என்றொரு வழக்கம். சாதம் சேர்ந்து போயிருந் தால் அதை எடுத்து ஜலத்திலே போட்டுடறது. விடியற்காலையிலே அந்த சாதத்தை எடுத்துப் பிழிந்து போட்டுவிட்டு, அந்த ஜலத்திலே உப்பு சேர்த்து ஒருத்தர் சாப்பிட்டாரானால், காலை வெயிலைத் தாங்கக் கூடிய சக்தி உண்டா கிறது. குறிப்பா, விவசாயிகள், வயல் வேலைக் குப் போகிறவர்கள் இப்படிச் செய்வதுண்டு... (-இந்த விவசாயிகளுக்கு போக பாக்யங் களைத் தரச் சொல்லி கேட்கிற ஒரு பிரார்த் தனை கூட பிராதஹ்கால சந்தியாவந்தனத் திலே உண்டு.)

சாதத்துத் தீர்த்தத்தைச் சாப்பிட்டால் வெயிலைத் தாங்கற சக்தி வரும். 'இது பழையது சாப்பிட்ட உடம்பு... ஒண்ணும் பண்ணிக்க முடியாது..' என்று கூட சொல் வார்கள்.

'இந்த பழையதும் பகவானும் ஒண்ணு' என்றார் ஒருத்தர்!

இது பழையது; அவனும் புராண புருஷன்.

இது எங்கே படுத்திருக்கிறது? ராத்திரி முழுதும் சாதம் ஜலத்திலே படுத்திருக்கிறது. அவனும் ஜலத்திலேதானே படுத்துக் கொண் டிருக்கிறான்! அதனாலே 'ஜலே சயானம்'.

'என்னை உள்ளபடி உணர்கிறவர்கள் ஒரு சிலரே' என்றான் பரமாத்மா கீதையிலே. பழையதின் பெருமையும் அதை அனுபவித் துணர்ந்த சிலருக்கே தெரியும்.

பழையதை எப்போ சாப்பிட வேண்டும்? அதிகாலையிலே. எம்பெருமானையும் அதி காலையிலே தியானம் பண்ண வேண்டும்.

பழைய சாதத்தைப் போல் பரமாத்மாவும் நாரங்கள் சூழ இருக்கிறான்! எனவே அவன் நாராயணன்.

**சே**தனம்-அசேதனம்... அதாவது அசை யும் பொருள்; அசையாத பொருள் என்ற இரண்டு விதமான பொருள்களிலேயும் இருப் பவன் நாரணன். இது அந்தப் பெயருக்கு இன் னொரு விளக்கம். 'சித்' ஆகவும் 'அசித்' ஆகவும் இருப்பவன் அவனே.

சித் என்பது நமது அறிவான ஜீவாத்மா.

# வந்தது போனஸ்

US
64

முதல் முறையாக
பரிசு
**10% போனஸ்**
**யூனிட்டுகள்**

உறுதியான
**20% டிவிடெண்டுடன்**
கூடவே

**பாதுகாப்பு,**
**எளிதில் ரொக்கம், லாபம்**
**மற்றும் பலப்பல**

நீங்கள் யூஎஸ்-64ல் முதலீடு செய்திருந்தால், உங்களுக்கு இன்னுமொரு வெற்றி. யூஎஸ்-64 சரித்திரத்திலேயே முதல் முறையாக பரிசாக 10% போனஸ் யூனிட்டுகள். 1:10 போனஸ் அளிப்பு இலவசமாக, அதாவது உங்களிடமிருக்கும் 10 யூனிட்டுகளுக்கு 1 யூனிட் போனஸாக கிடைக்கிறது. இத்துடன் 1995-96 வருடத்திற்காக உங்களுக்கு கிடைக்கும். உறுதியான 20% டிவிடெண்டும் உண்டு.

**விசேஷ ஜூலை விலை ரூ. 14.00 20 ஜூலை வரை மட்டும்.**

யூஎஸ்-64 யூனிட்டுகள் என்றும் பாதுகாப்பு, எளிதில் ரொக்கம் மற்றும் லாபத்தை அளிக்கிறது. ஆகவேதான் 2 கோடி மக்கள் சேர்ந்து இது அவர்களின் வாழ்க்கையின் முக்கிய அங்கமாகி உள்ளது. இன்றும் என்றும் என்றென்றும்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
*உங்கள் மேலான எதிர்காலத்திற்கென*

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர், போன்: 214973 • சென்னை, போன்: 517101, 517190
• மதுரை, போன்: 38186 • திருச்சி, போன்: 760060.

SISTA SAATCHI & SAATCHI-0093/96 M TM B

# காவிரிக் கரையில் கால் ஏக்கர் நிலம், முதலீட்டாளர்களுக்கு காய்கறி இலவசம்



தொடர்ந்து 7 ஆண்டுகளுக்கு
ஒவ்வொரு 7 நாட்களுக்கு ஒருமுறை
உங்களுக்கு 7 கிலோ காய்கறி தர

வருகிறான்



## காய்கறிகாரன்

- விலைவாசி ஏற்றத்தின் பாதிப்பின்றி நீங்கள் விரும்பும் 7கிலோ காய்கறிகள் உங்கள் இல்லம் தேடி இலவசமாக வருகிறது, அல்லது விவசாய வருமானமாக ஆண்டுக்கு ரூ. 3000/- முன் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.
- கால் ஏக்கர் நிலத்தை 7 வருடங்களுக்குப்பிறகு வீட்டுமனைகளாக நல்ல விலைக்கு விற்கலாம்.
- முதலீட்டிற்கு சிறந்த வருமானம் - வருமான வரி விலக்கு உண்டு.

### முதலீட்டுத் திட்ட விவரம்

| திட்டம் 'A'<br>சுலப தவணைத்திட்டம் | | திட்டம் 'B' *<br>குறுகிய தவணைத்திட்டம் | | திட்டம் 'C' *<br>ஒரே தவணைத்திட்டம் |
|---|---|---|---|---|
| முன்பணம் | ரூ. 3,200/- | முன்பணம் | ரூ. 11,000 | ஒரே தவணை |
| மாதத் தவணை | ரூ. 2,400/- | மாதத்தவணை | ரூ. 10,000 | ரூ. 30,200/- |
| மாதங்கள் | 12 | மாதங்கள் | 2 | |

* B மற்றும் C திட்டத்தில் சேருபவர்களுக்கு உடனடியாக காய்கறி வழங்கப்படும். பதிவுக் கட்டணமாக ரூ. 2,500/- கூடுதலாக செலுத்த வேண்டும்.




**B K எஸ்டேட்ஸ்**

109, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை
நுங்கம்பாக்கம், சென்னை 600 034
தொ.பேசி 8266978, 8277234
பேக்ஸ் : 91-044-8282792
கிளை : A-3, S V V காம்ப்ளக்ஸ், 9,சாஸ்திரி சாலை,
தில்லை நகர், திருச்சி - 620 017. போன் : 33076.




**சிறப்பு பரிசு!**

ஜூலை 1 முதல் 31 தேதிக்குள் எங்கள் B&C திட்டங்களில் சேரும் முதல் 100 நபர்களுக்கு ரூ.1,400/- மதிப்புள்ள காபி மேக்கர் அன்பளிப்பாக தரப்படும்.

JEGI/BKE/3296

அசித்–அசேதன–அறிவற்ற பதார்த்தங்கள். உலகில் எத்தனையோ ஜீவன்கள் உள்ளன. மனிதனுக்குள்ளே இருக்கும் ஜீவன் ஒரு சாக்கடைப் புழுவுக்குள்ளும் இருக்கிறது; ரொம்ப பரமாணுவான உயிர்களுக்குள்ளேயும் இருக்கு...! 'அதைக் கண்ணாலே பார்க்க முடியுமா?' என்றால்... 'பார்க்க முடியாது' என்கிறது உபநிஷத்.

பகவின் வால் நுனியில் உள்ள கேசத்தில் ஒரே ஒரு கேசத்தை எடுத்துக் கொள். அதை நூறு கூறுபோடு... 'ரோமத்தை நூறு கூறு போட முடியுமா!' என்று கேள்வி கேட்கக் கூடாது. மனசாலேயே கூறு போடு என்கிறது உபநிஷத்!

அப்படி நூறு கூறு போட்டதில் கிடைக்கும் ஒரு இழையை எடுத்து மறுபடியும் நூறு கூறு போடு... இப்படிப் போட்டுக் கொண்டே போனால் இறுதியில் கிடைக்கக் கூடியதுதான் ஜீவன் என்கிறது உபநிஷத்!

இந்தக் காலத்திலே மைக்ராஸ்கோப் என்கிற கருவியைக் கொண்டு பல நுண்ணிய விஷயங்களையெல்லாம் பார்க்கிறார்கள். ஆனால் மைக்ராஸ்கோப்பைக் கொண்டு ஆத்மாவைப் பார்க்க முடியுமா! முடியவே முடியாது! காரணம், அதற்கு இருக்கிற ஞானம் எங்கும் பரந்து விரிந்திருக்கும்.

இதற்கு ஒரு கதை சொல்லலாம்.

**வி**யாஸர் உட்கார்ந்திருந்தார். ஒரு சின்ன புழு– ரொம்ப அல்பமான புழு– தன் உடம்பைக் கஷ்டப்பட்டு இழுத்துக் கொண்டு போயிற்று. வியாஸர் வாயை மூடிக் கொண்டு இராமல் இந்தப் புழுவோடு பேசுகிறார்:

"ஏ புழுவே, புழுவே! என்ன இவ்வளவு வேகம்? எங்கே போகிறாய்..." என்று கேட்கிறார்.

அந்தப் புழு அவரைத் திரும்பிப் பார்த்துச் சொல்கிறது,

"அதோ பாரும்! அங்கே இரண்டு காளை மாடு பூட்டப்பட்ட வண்டி வேகமாக வருகிறது. அந்த வண்டி இந்தப் பாதையிலே வேகமாகப் போகப் போகிறது. அது என்மீது ஏறினால் அநியாயமா நான் மாண்டு போய் விடுவேன். ஆகையினாலே அந்த வண்டி வந்து சேர்வதற்குள்ளே வேகமாகப் போகிறேன்..." என்றது புழு.

வியாஸர் அதோடு விடாமல், "அந்த வண்டி உன் மேலே ஏறட்டுமே... நீ போனால் தான் என்ன?" என்று கேட்டாராம்.

அந்தப் புழு நகர்வதை நிறுத்திவிட்டதாம்! உரையாடல் தொடர்ந்தது:

"வியாஸரே! என்ன சொன்னீர்...? மறுபடியும் சொல்லும்..."

"நீ போனால்தான் போயேன்னு சொன்னேன்... என்ன இப்போது...?"

"உமக்கு என்னைக் கண்டால் அருவை- அதனால் தான் அப்படிச் சொல்நீர்."

"என்ன அருவை...?"

"நான் என்ன சந்தியாவந்தனம் பண்ணணுமா? நான் என்ன மாத்தியானிகம் பண்ணணுமா! உபந்யாஸம் கேட்கணுமா? இல்லை நான் என்ன பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணணுமா? பையனுக்கு உபநயனம் பண்ணணுமா? நான் என்ன பந்து பரிபாலனம் பண்ணணுமா? ஆசார்யனை சேவிக்கணுமா...? இதையெல்லாம் நான் செய்ய அவசியமில்லையே என்று உமக்கு அருவை..." என்றது புழு!




**இ**ந்தக் கதையினாலே இரண்டு விஷயங்கள் உணர்த்தப்படுகின்றன.

ஒன்று: சக்தி சாமர்த்தியத்தைக் கொடுத்து, அறிவைக் கொடுத்து, சாஸ்திரத்தைக் கொடுத்து வைக்கப்பட்டிருக்கு நமக்கு. அப்படிப்பட்ட நாமே நமக்கு விதித்த காரியங்களைச் செய்யா விட்டால் அந்தப் புழுவைக் காட்டிலும் நாம் மட்டமாகப் போய் விடுகிறோம்!

இரண்டு: புழுவுக்குள்ளேயும் இருக்கக் கூடிய ஆத்மா மிக நுண்ணியது. எவ்வளவு அல்பமான வஸ்துவானாலும் அதற்குள்ளேயும் அந்தராத்மா–பரமாத்மா இருக்கிறான்.

சித்– அசித் பதார்த்தங்கள் அனைத்திலும் பகவான் இருக்கிறான். சித்–அசித் சேர்ந்து அமைவனதான் நாரங்கள். நாரங்களை இருப்பிடமாகக் கொண்டவன் நாராயணன். 'அந்த நாரங்கள்– அதாவது சேதன– அசேதன பதார்த்தங்கள் எவனிடத்திலே உறைகின்றனவோ அவன்' என்றும் இன்னொரு பொருள் சொல்லலாம் நாராயண சப்தத்துக்கு.

(தொடரும்)

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? ரூபாய் ஐம்பது கோடி செலவில் உள்ளாட்சித் தேர்தலை அவசியம் நடத்த வேண்டுமா..?*

! அப்படி நடத்தாவிட்டால், அதைவிட பலகோடி அதிகமான வரிப் பணம் ஒரு சிலரின் பாக்கெட்டுக்குப் போன வண்ணம் இருக்கும்- அம்மா ஆட்சியில் நடந்தது போல! எனவே நியாயமான முறையில் பெருந் தொகை செலவழிப்பதில் தவறில்லை.

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

*? காவிரிப் பிரச்னையில் ட்ரிப்யூனல் உத்தரவுக்குப் புறம்பாக எந்த பேச்சு வார்த்தையும் நடத்தப் போவதில்லை என்று முதல்வர் கருணாநிதி கூறியிருக்கிறாரே...?*



• "சதி!"



• சரிவு!

! ஜெ. புரளி பண்ணுவதுபோல், 'பேச்சு வார்த்தையே கிடையாது' என்று அவர் கூறவில்லை; ட்ரிப்யூனல் உத்தரவுக்குப் புறம்பாகப் பேச்சு வார்த்தை இல்லை என்று தான் கூறியிருக்கிறார். இது கவனிக்கத்தக்கது. இதே நிலையில் அவர் உறுதியாகத் தொடர வேண்டும் என்று பிரார்த்திப்போம்.

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

*? எங்கள் மீது கை வைத்தால் தமிழகத்தில் ரத்த ஆறு ஓடும் என்று முன்னாள் அமைச்சர்கள், எம்.எல்.ஏ.க்கள் கூறினார்களே... இப்போது தலைமை மீதே கை வைத்தும் யாரும் மூச்சுவிடக்காணோமே..?*

! நிஜமான அதிகாரம் மக்கள் கையில்தான் உள்ளது என்பதை மறந்து விட்ட அதிகார மமதையில் அப்படிக் கூறினார்கள். இப்போது உண்மை தெரிந்ததும் 'கப் சிப்' ஆகிவிட்டார்கள்!

● ஆர். ரமேஷ் பாபு, விருத்தாசலம்.

*? ஜெ.ஜெ. டி.வி.யில் 'இதுதான் நடந்தது'- சசி கைது பற்றிய நிகழ்ச்சி- பார்த்தீர்களா...?*

! பார்த்தேன். ஆனால் ஏமாறவில்லை. அதன் பிறகு, ஊழலின் விளைநிலமான 'ஜெ.ஜெ.' ஒளிபரப்பே நிறுத்தப்பட்டது தானே நடந்தது! அதையும் கவனித்தேன்.

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

*? தற்போதைய மாவட்ட பிரிப்பில் புதிய பெயர்கள் சூட்டப்பட்டாலும் ஜாதி அடைமொழிகள் ஒழிக்கப்பட்டுள்ளனவே... இது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?*

! மாவட்டப் பெயர்களிலிருந்து ஜாதி அடைமொழியை எடுத்து விட்டாலும் புதிய மாவட்டங்கள் உருவாக்கப்படுவதே அந்தந்த பிரிவினரைத் திருப்திப்படுத்தத் தான் என்பது வெட்டவெளிச்சமான விஷயம். 'ஜாதி' மக்கள் மனத்திலிருந்தும் முக்கியமாக அரசியல்வாதிகளின் சிந்தனையிலிருந்தும் ஒழிவதுதான் முக்கியம்!

# அ.தி.மு.கவின் எதிர்காலம்?

● வி. ரெங்கநாதன்,
சென்னை - 4?

*? 'முந்தைய அரசு (அ.தி.மு.க.) மிகவும் மோசமான ஆட்சி நடத்தியது. அதனால்தான் நான் கைது செய்யப்பட்டேன்' என்று பிரேமானந்தா கூறியிருப்பது பற்றி...?*



• 'பவலை'!

! அடடா! அ.தி.மு.க. ஆட்சியில் நடந்த ஒரே உருப்படியான விஷயம் அவர் கைதானதுதான் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தோம்...!

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

*? 'தி.மு.க.வின் வெற்றி சிலந்தி வலை போன்றது'- என முன்னாள் அமைச்சர் கே.ஏ. கிருஷ்ணசாமி கூறியிருக்கிறாரே...?*

! ஆமாம்! அந்தச் சிலந்தி வலையில் இவர்களின் ஊழல்கள் ஈக்களைப் போல் சிக்கிக் கிடக்கின்றனவே!

● எஸ். நாராயணன், பண்ணுருட்டி.

*? பன்னீர்செல்வம் பெயரில் மாவட்டம்*



• வாலி!



• கறார்!



• புகார்!

அமைத்ததை வரவேற்கும் வீரமணி, மூதறிஞர் ராஜாஜி பெயரில் மாவட்டம் அமைத்தால் கொச்சைப்படுத்திப் பேசுகிறாரே...?'

' வீரமணியைத் தெரியாதா..? பாவம்! விட்டு விடுங்கள்! முதல்வரின் பதிலைப் படித்து சந்தோஷப்படுங்கள்.

● செ. அன்புமதி கோபிநாத்,
கொப்பம்பட்டி. ☐

*? நடந்த ஊழலுக்கு மூல காரணமானவரை விட்டு விட்டு மற்றவரை மட்டும் கைது செய்ததன் மர்மம் என்னவாக இருக்கும்?*

! உங்களுக்கு செஸ் தெரியுமா...? சிப்பாய்கள், யானை, குதிரை, ராணி எல்லாவற்றையும் வெட்டிய பிறகு ராஜாவை மடக்கி 'செக்' வைப்பதுதான் புத்திசாலித்தனம்.

● பி. ராஜன், தாராபுரம்.

*? ஐக்கிய முன்னணி அரசின் சாவி ராவ் கையில் உள்ளது என்று தங்கபாலு சொல்கிறாரே..?*

! கௌடா சமர்த்தாக இருந்தால், டூப்ளிகேட்டை பத்திரமாக வைத்துக் கொள்வார்.

● ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.

*? வாழப்பாடியார் மீண்டும் ஜெயாவுக்கு லாலி பாடுவாரா...?*

! செருமி, சுருதி சேர்த்துக் கொண்டிருக்கிறார்!

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு:

*? பொது சிவில் சட்டம் உண்மையில் தேவைதானே...?*

' பொய்யாகத் தேவை' என்று யாராவது சொல்வார்களா?! 'தேவைதானே' என்றால் போதாதோ... அது என்ன 'உண்மையில் தேவைதானே...'!



• சாவி....



•.... இருக்கிறதா?

● இ. ராதாகிருஷ்ணன்,
பட்டுக் கோட்டை.

*? 'சசிகலா குடும்பத்தின் மதிப்பைக் கெடுப்பதற்காகவும் 'ஜெ' விடமிருந்து சசியைப் பிரிப்பதற்காகவும்தான், கருணாநிதியும் ப. சிதம்பரமும் சதி செய்கிறார்கள். அதன் விளைவே கைது நடவடிக்கை...' என நடராஜன் கூறியுள்ளாரே?*

! "என்னிடமிருந்து என் மனைவியைப் பிரிக்க ஜெ சதி செய்கிறார்!" என்று ஒரு காலத்தில் இந்த நடராஜனே சொல்லியிருக்கிறார். இப்போதோ, சசிகலாவை எக்காரணம் கொண்டும் விலக்கி வைக்க முடியாது என்று கூறும் ஜெயலிதா, அ.தி.மு.க. தொண்டர்கள் யாரும் நடராஜனை சிறையில் போய்ப் பார்க்கக் கூடாது என்று உத்தரவிடுகிறார்! இந்தப் பின்னணியில் பார்க்கும்போது நடராஜனின் பழைய குற்றச்சாட்டுதான் உறுதியாகிறது.

● இரா. வளையாபதி,
தோட்டக்குறிச்சி.

*? அ.தி.மு.க.வின் எதிர்காலம்....?*

! நல்லதொரு முதல்வராக விளங்கத் தாம் தகுதியற்றவர் என்பதை ஏற்கெனவே நிரூபித்து விட்டார். ஜெ. தற்போது, நல்லதொரு எதிர்க்கட்சித் தலைவராக விளங்கக் கூட தகுதியில்லை தமக்கு என்பதைத்தான் உணர்ந்திக் கொண்டிருக்கிறார். அவருடைய அறிக்கைகளும் பேட்டிகளும் இதையே நிரூபிக்கின்றன. சசிகலா மாயையிலிருந்து ஜெயலலிதா விடுபட வேண்டும்; ஆட்சியில் அமர்வது தாமும் தம் சுற்றமும் கலபமாகப் பணம் பண்ணுவதற்காக அல்ல என்பதை அவர் உணர வேண்டும்; அப்படிச் செய்வாரானால் அ.தி.மு.க.வின் எதிர்காலமும் ஏற்றம் பெறும். ஆனால், ஜெயலலிதாவோ தமது குற்றங் குறைகளை மூடி மறைப்பதற்காக, கருணாநிதி ஆட்சி பேரில் அபத்தமான, அபாண்டமான குற்றச் சாட்டுகளை அள்ளி வீசிக் கொண்டிருக்கிறார்! இப்படியே போனால் அ.தி.மு.க.வின் எதிர்காலம் அதல பாதாளம் நோக்கிச் சரியத்தான் செய்யும்.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர்: செ. அன்புமதி கோபிநாத், 'அன்பு இல்லம்' கொப்பம்பட்டி அஞ்சல், திருவள்ளுவர் மாவட்டம் 621 012.

காலைப் பத்திரிகையில் முகத்தைப் புதைத்துக் கொண்டிருந்த வரது, வெளிவாசலில் ஏதோ சப்தம் கேட்டு, தலையை வெளியே கொண்டு வந்து, "ஆழு" என்றார்.

"நான்தான் அண்ணா, ராஜபாண்டி..." என்றான், அவர் பக்கவாட்டில் நின்றவன்.

வரது, பேப்பரைக் கடாசிவிட்டு எழுந்தார். தெரு நடைக்கு, தன் பாரிய சரீரத்தைத் தூக்கிக் கொண்டு போய், வெற்றிலைச் சாற்றை வது இருக்கும். இரண்டு பக்கமும் கொய்யா, வேம்பு, துளசி என்று மரம், செடிகள். காற்றை வடிகட்டி அனுப்பிக் கொண்டிருந்தது கீற்றுப் பந்தல்.

"ஊம். என்ன பண்ணிட்டிருக்கே?" என்றார் வரது.

"சும்மாத்தான். ஒன்றும் சரிப்படலை. வர்ற தை பிறந்துதான் ஏதானும் குதிரும்னு சோசியர் சொல்றார்."

"ஊம்" என்றபடி, தலையசைத்தார் வரது.

# கல்யாண அழைப்பும்

உமிழ்ந்தார். 'நாராயணா' என்றார். சொல்லி வைத்தாற்போல, நாராயணன் எனப்பட்டவன் தோன்றி, பித்தளைக் குவளையை நீட்டினான். வரது, அதை வாங்கி வாய் கொப்பளித்துக் கொண்டார். தோள் துண்டால், வாயைத் துடைத்துக் கொண்டார்.

"ராஜபாண்டியா! ஆள் அடிக்கடி மறந்துடுது. பேர், ஊர் எல்லா இழவும் மறந்துடுது பாரேன். எல்லாம் வயசு பண்ணற கொனஷ்டை."

வரது, ஊஞ்சலைக் காட்டி, "உட்காரேன்" என்றார். அவன் அதை மறுத்து விட்டு, அவருக்கு நேர் எதிரே, தூணில் சாய்ந்தபடி தரையில் அமர்ந்ததை வரது, திருப்தியுடன் ஏற்றுக் கொண்டதைக் காண முடிந்தது. முறம் மாதிரி அகன்று இருந்த பாதத்தின் கட்டை விரலைத் தரையில் ஊன்றி, ஊஞ்சலைச் சற்றே விந்தி விட்டார். ஊஞ்சல், யானையின் காது மாதிரி அசையத் தொடங்கியது.

"என்ன சௌக்யமா இருக்கியா, ராஜபாண்டி?" என்று கேட்டார் வரது.

"ஏதோ இருக்கேன்" என்று ஹீனஸ்வரத்தில் அவன் பதில் சொன்னான். காற்று, குப்பென்று வீசியது. தெற்குப் பார்த்த வீடு. வாசலில், வாசல் படப்பு வரை நீண்டிருந்தது, கோடைப் பந்தல். ரொம்ப தோரணையுடன் கட்டப்பட்ட வீடு. பெரிய பெரிய தூண்கள் வீட்டு உத்தரத்தைத் தாங்கிக் கொண்டிருந்தன. வரது அமர்ந்திருந்த ஊஞ்சல் பலகையே பார்த்தவர்களைப் பிரமிப்பு கொள்ளச் செய்யும் தன்மையது. என்ன பலகை? கன்னங்கரேலென்று, யானையைக் குளிப்பாட்டியது போல, எண்ணெய் சாத்திய பிள்ளையார் உடம்பு மாதிரி என்ன மினுமினுப்பு? முழு வீசையில், ஊஞ்சல் ஆடினாலும், சுவர் இடிக்காத, அகலம் நீளமான மேல் வாசல். மேல் வாசலுக்கும், தெரு இரும்பு அடைப்புக்கும் நாற்பது அடியா



அந்தத் தலையசைப்பு, எதிரில் இருந்தவனின் சகல சோகங்களையும் அழித்து நீக்கி விடுகிற தினுசில் இருந்தது. எதிரில் தரையில் அமர்ந்திருந்தவன், வரதுவின், மெய்ப்பாடுகளையே கூர்மையாக அவதானித்துக் கொண்டிருந்தான்.

சௌகர்யமாக இருப்பவர்களுக்கு அப்படி அவர்கள் இருக்கிறவர்கள் என்பதைப் பௌதிகமாக விளங்கும்படியாகவே, அவர்கள் கடவுளால் படைக்கப்படுகிறார்களோ என்பதாக நினைத்துக் கொண்டான் ராஜபாண்டி. ரெட்டை நாடிதான் வரதுவுக்கு என்றாலும் ஊளைச் சதை இல்லாதபடிக்கு, ஆரோக்கியமாகவே காணப்பட்டார் வரது. வயசு எப்படியும் எழுபதைத் தாண்டி இருக்குமே. நீட்சண்யமான கண்ணும், சுத்தமாக சவரம் பண்ணின முகமும், வெள்ளை வெளேரென்று கைவைத்த, பனியனுக்கும் சட்டைக்கும் இடைப்பட்ட தரத் தில் 'பாடி' மேலேயும், நல்ல தரத்திலான கதர் வேஷ்டியுமாக அவர் இருந்தார். செய்து, ஒட்ட

# கால் பவுன் காசும்



வைத்தது போல மொழுக் மொழுக் விரலும், அதில் முடிச்சு முடிச்சாக முடியும் என்று எல்லாம் கனஜோராக இருந்தது. அவர் பிரசன்னம்.

வரது, தலையை அசைத்தபடி இருந்தார். வரலாற்றின் பக்கங்களைப் புரட்டுவது போல இருந்தது. அந்த அசைவு.

"ம்... எப்படிப்பட்டவர் உன் தகப்பனார்... இன்னொருத்தர் அவர் மாதிரி இருக்க முடியுமோ? ஜனிக்கத்தான் முடியுமோ? அந்தக் குரல் என்ன? ஜிலுஜிலுப்பு என்ன? பந்தா என்ன? பிர்க்கா என்ன? இன்னொருத்தன் பிறந்து வரணும்டா ராஜபாண்டி..."

வரது கண்களை மூடிக் கொண்டார். மனோலயமாக, அந்தக் காலத்துக்கே பிரயாணம் ஆவது மாதிரி தோற்றம் கொண்டிருந்தார் அவர்.

"தஞ்சாவூர்ல, இப்போ கிருஷ்ணா பேலஸ் இருக்கோல்லியோ, அதுக்குப் பக்கத்துல. அந்தக் காலத்துல 'டென்ட்' கொட்டாய் போடுவான். அங்கேதான் ஸ்பெஷல் நாடகம் போடுவான். பத்து நாள். பதினைஞ்சு நாள்கள், தொடர்ந்து நடக்கும். உங்கொப்பா, ராஜபார்ட். சந்தான லட்சுமி ஸ்திரீ பார்ட். மன்னார்குடி சோமு, நாரதர். செங்கோட்டை பால்சாமி ஹார் மோனியம். என்னங்கிறே. காஞ்சிபுரம் நைனா பிள்ளை, ராட்சசன்டா அவன், மகாவித்வான். முன்னாடி உக்காந்துட்டு, "கண்ணப்பா... சாமி சத்யபாமா பாரு, 'கோபியர் கொஞ்சும் ரமணா' பாடுன்னு கேட்டு, 'ஒன்ஸ்மோர்' கேட்டு, கைதட்டறது என்ன, பேஷ் பேஷ்ங்கறது என்ன, அடடா. நாடகமாவா இருந்துது? பெரிய சதஸ் மாதிரி இருக்குண்டா... அது ஒரு வார்ப்பு. அது ஒரு

பிரபஞ்சன்

ஜென்மம்...''

ராஜபாண்டி, தன் அப்பாவைப் பற்றித் தான் வரது பேசுகிறார் என்கிற பிரக்ஞை இன்றி, புருவம் உயர, வாய் பிளந்தபடி கேட்டுக் கொண்டிருந்தான். வாசல் படப்பு மேல் ஒரு காக்கை வந்து அமர்ந்து, சாவதானமாக தன் இறக்கையை நீவி விட்டுக் கொண்டிருந்தது.

வரது, 'நாராயணா' என்றார். நாராயணன் வந்து நின்றான்.

''காலை ஒன்பது மணி ஆகலை. அதுக்குள்ளே வெயிலைப் பார்... பட்டாணி வறுக்கிறது மாதிரி வறுக்கிறது பார்... நீ என்ன பண்றே? ரெண்டு லாடு, கொஞ்சம் பாதம்கீர், நிறைய ஐஸ் போட்டுக் கொண்டா'' என்றார் வரது.

நாராயணன், ராஜபாண்டியைப் பார்த்தான். 'இவனுக்குமா' என்பது போல் இருந்தது அவன் பார்வை.

ராஜபாண்டி, காக்கையையே இன்னும் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அவனுக்கும் குடிக்கக் கொடு.''

வரது, சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டார்.

''இந்த வெயிலுக்கு நுங்கு இருக்கில்லையா, நுங்கு, அதைப் பாலில் போட்டு, நல்லா ஊறவைக்கணும். கொஞ்சம் வெள்ளரிப் பழத் துண்டு, இம்மாம் போல போட்டு, நல்லா பிசைஞ்சு, நன்னாரி கொஞ்சம் விட்டு, ஐஸ் போட்டு, பிரிட்ஜ்ல வச்சு, சரியா, பத்து மணிக்கு ஒரு வாட்டி, பன்னெண்டு மணிக்கு ஒரு வாட்டி சாப்பிடணும். உடம்பு, ஊட்டியில இருக்கிற மாதிரி இருக்கும்டா.''

ராஜபாண்டிக்கு, வரது சொல்லுகிற விஷயம் எல்லாம், அதி ஆச்சர்யமான விஷயமாக இருந்தது. தன் புருவத்தை உயர்த்தி அவரை ரசித்தான். ரசிப்பது மாதிரி இருந்தான் என்பதே உண்மை.

வரது, ஒரு காலை மடக்கி, மறு காலைத் தொங்க விட்டுக் கொண்டு உட்கார்ந்தார். லாடும் பாதாம்கீரும் வந்தது. வரதுவுக்குப் பாதாம்கீரும், ராஜபாண்டிக்கு பானகம் போன்ற ஏதோ ஒன்றும். திரவமாகவே இருந்தது அது. சாப்பிடும் போது பேசக் கூடாது என்கிற கொள்கை உடையவர் போல, வரது உண்டு, குடித்து முடித்தார். சமையல்கார 'நாயின்' ஓர வஞ்சனையை மனசுக்குள் நொந்து கொண்டு ராஜபாண்டியும் குடித்து முடித்தான்.

''நான் என்ன சொல்றேன்னா, உடம்பை நல்லா வச்சுக்கிடணும். உங்க அப்பா, கடைசி வரைக்கும் எப்படி இருந்தார்? பித்தாளையில செஞ்சது மாதிரி அல்லவா உடம்பு. பீச்சாங் கையால ஐம்பது கர்லாவும், சோத்துக் கையால ஐம்பது கர்லாவும், தெனம் சுத்துவார். நூறு

## அருள்வாக்கு

**அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம்!**

**''சலம்'' என்றால் சஞ்சலம்தான். சஞ்சலித்துக் கொண்டேயிருக்கும் மனசை அடக்க முடியாதுதான். ''துர் நிக்ரஹம்'' - நிக்ரஹம் செய்வதற்கு முடியாது. ''அஸம்சயம்'' - இதிலே ஸந்தேஹமில்லை. ''அர்ஜுனா! (அர்ஜுனனை 'மஹாபாஹு', என்கிறார் மஹா வீரனாதலால் அவனுடைய தோள் வலியைக் குறிக்க 'மஹாபாஹு' என்று கூப்பிடுகிறார். வெளியுத்தத்தில் போலவே உள் யுத்தத்திலும் அவன் மஹா வீரன் ஆகணும் என்று தாத்பர்யம்.) ஸந்தேஹமில்லாமல் நீ**

தண்டால் எடுக்காமே, பல்லில காப்பியைக் காட்டுவாரோ? இந்தக் கண்ணாலே நானே பார்த்து இருக்கேனே, பாய்ஸ் கம்பெனியில இருக்கிறச்சே! என்ன சுந்தரமான மனுஷன்? சும்மாவா, மானேஜர் சுப்பா நாயுடு உன் அப்பனையே சுத்திச் சுத்தி வந்தார். ஆம்பிளையையே மயக்குற தேகம் அல்லவா அவர் தேகம்? ஊம். அது ஒரு வாகு!''

வரது, வெற்றிலைச் செல்லத்தை அருகில் நகர்த்திக் கொண்டார். வெற்றிலைகளில் பத்தை எடுத்துக் கொண்டு, அவைகளில் ஒவ்வொன்றையும் தொடையின் மேல் போட்ட துண்டின் மேல் துடைத்து, சிட்டைத் துண்டிலிருந்து நூலைப் பிரிப்பது மாதிரி, நரம்பைக் கிழித்து எறிந்து, சுண்ணாம்பை ஆள் காட்டி விரலில் தொட்டுக் கொண்டு அதை வெற்றிலையின் முதுகில் சுரண்டுவது போலத் தடவி, வாயில் இட்டு மென்று, முதல் சாற்றைத் துப்பி... என்கிற சம்பிரதாயங்களை நிரப்பிக் கொண்டிருந்தார் வரது. ராஜபாண்டி, வரது தன் அப்பாவைப் பற்றி ஏதானும் அசிங்கமாகப் பேசுகிறாரோ என்பதாக நினைத்துக் கொண்டு அமர்ந்திருந்தான். வரது, அவன் அப்பாவைப் பற்றி, நூற்றி ஒன்றாவது தடவையாகப் பேசிக் கொண்டிருக்கிறார். ஒவ்வொரு முறையும், மேற்படி விஷயங்களையே சற்று ரசம் ஏற்றி, சற்று கிட்ட நெருங்கிப் போட்டோ பிடிக்கிறார்போல் சொல்கிறார், அவன் அவைகளை மீண்டும் மீண்டும் கேட்கிற நிர்ப்பந்தத்துக்கு ஆளாகிறான்.

''என்னடா சொன்னேன், ராஜபாண்டி! ஆள் மன்மதன்டா, மன்மதன். அதனாலதான் ரதி மாதிரி சரோஜா வந்து சேர்ந்தாள். உங்க அம்மாவைத்தான் சொல்றேன். அந்தக் காலத்

சொன்ன மாதிரிதான் மனஸ் சஞ்சலித்துக் கொண்டேயிருக்கிறது. அதை நிக்ரஹம் பண்ணுவது லேசில்லை தான்'' என்று, அவன் சொன்னதற்கு ஆமாம் போட்டுவிட்டு, அதற்குப் பரிஹாரமும் சொல்கிறார்.



ரொம்பவும் முக்யமான விஷயத்தைச் சொல்கிறார்: ''அப்யாஸம், வைராக்யம் என்ற இரண்டில் தீவிரமாயிருந்தாயானால் மனோ நிக்ரஹம் பண்ணிவிடலாம்'' என்கிறார்.

''எத்தனை திமிறினாலும், உன்னை திசை தப்பி எத்தனை தரம் இழுத்துக் கொண்டு போனாலும் ஸரி, அதற்காக மனஸைக் கட்டுப்படுத்த ப்ரயாஸை எடுக்காமல் விட்டு விடாதே. வெளியிலே ஓடுகிற அதை ஒவ்வொரு தரமும் மறுபடி உன் வழிக்கு இழுத்துக் கொண்டு வரப் பார். இப்படி விடா முயற்சியுடன் எதிர்த்துப் போராடிக் கொண்டேயிருந்தால், அது ஒரு நாள் அடங்கிப் பணிந்து போக ஆரம்பித்துவிடும். எதிடமும் ஆசைவைக்கப்படாது என்ற வைராக்ய சிந்தை, எத்தனை வழுக்கி விட்டாலும் ஊன்றி நிற்க அப்யாஸம் செய்து கொண்டே இருப்பது - ஆகிய இந்த இரண்டால் முடிவிலே ஒரு நாள் ஜயித்து விடலாம்'' - இப்படி பகவான் ஆறுதலாக பதில் சொல்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

துல உங்க அப்பன் சினிமாவுக்கு வந்தப்புறம் தான் சரோஜாவைச் சந்திச்சார். என்னையும், உங்க அப்பா, ''என்னத்துக்கடா டிராமா கம்பெனியில வடிச்சுக் கொட்டி வீணாப் போறே... என்னோட வந்துடு. ஜுபிடர் முதலாளிகிட்டே சொல்லி வேலை போட்டுத் தர்றேன்னு சொல்லி அழைச்சுப் போயி, வேலை பண்ணி வச்சாரோ, நான் பிழைச்சேனோ... புரடக்ஷன் பாய்னு தொடங்கி, அசிஸ்டெண்ட், மானேஜர்னு வளர்ந்து, வீடு, வாசல்னு, ஐவேஜி வந்து நானும் மனுஷனாயிட்டேன். என்ன சொன்னேன்? உங்க அம்மா அப்போ 'மாயாவதாரத்துல' ஆக்ட் கொடுத்துக்கிட்டு இருந்துச்சி. சுத்தமான வெண்கல சாரீரம். கண்டினா ரத்தம் தெறிக்கிற நிறம். பவிசுக்குக் கேட்பானேன்... நிறைய முதலாளிக நான் நீன்னு போட்டி போட்டுக்கிட்டு வந்த நேரம். கன்னா பிக்சர்ஸ் 'லெனா' கூட உங்க அம்மா மேல ஒரு கண் வச்சிருக்கார்னு தெரிஞ்சது. உங்க அம்மா சம்மதிக்கலை. அதைவிட உன் பாட்டி ஒத்துக்கலைன்னுதான் சொல்லணும்... எப்படியோ உங்க அம்மாவுக்கு, உங்கப்பா கன்னப்பா மேல கண் விழுந்துடுச்சி. உங்க அம்மாவுக்கும் அப்பாவுக்கும் நான்தான் தூது. புறா. புரியலையா? நான்தான் கடுதாசி கொண்டு போயி குடுக்கறது, வாங்கறது. உங்க அப்பா ஒரு வாட்டிக்குக் கடுதாசியும் கொடுத்து கால் ரூபாயும் கொடுப்பார். கால் ரூபாய்னா, இப்போ மதிப்புக்கு ஏழு எட்டு ரூபாய். அந்தக் கால் ரூபாயிலே, போண்டா சாம்பார், ரெண்டு இட்லி, நுரைக்க நுரைக்க, டிகாக்ஷனைத் தூக்கலாக விட்ட காப்பி இத்தனையும் சாப்பிடலாம்னா பார்த்துக்கோயேன். கடுதாசிப் பொட்டலத்துக்குள்ளே மின்சாரத்தை வைத்துக் கட்டி என்னண்டைக் கொடுத்த மாதிரி, நான் மின்சாரக் கடத்தி மாதிரி. அதைக் கொண்டு போயி சரோஜாவண்டை கொடுத்தா, அந்த அம்மா மூஞ்சி குப்புன்னு விளக்குப் போட்ட மாதிரி எரியும் பார்த்துக்கோ... ஜெமினி, ஜுபிடர், மசியநாயகம் பிலிம்ஸ் எல்லாம் சேர்ந்து பிரமாதமா கல்யாணத்தைப் பண்ணி வச்சா... என்னா கல்யாணம்? சினிமான்னா முகத்தைத் திருப்பிக்கிற ராஜகோபாலாச்சாரியார் வந்தார்னா பாரேன். என்னெஸ்கிருஷ்ணன் என்ன, காளிரத்னம் என்ன, வசந்த கோகிலம் என்ன, பாகவதர் என்ன, நட்சத்திரங்கள் எல்லாம் ஒரு கூரைக்குள்ளே வந்தாச்சு. சமையல், நம்ம வெங்கு பையன். ராஜாக்கள் வீட்டுக் கல்யாணத்துக்குச் சமையல் பண்ற கை. சாப்பாடு எப்படிங்கறே, அமிர்தம். என்னத்தைச் சொல்றது?''

வரது, நெற்றிக்குக் கீழே, இரு புருவச் சந்திப்புக்கும் கீழே இறங்கி, பம்மென்று பருத்து, முட்டை வடிவில் சதையால் பண்ணி வைத்தது போன்ற மூக்கை, விகாரமாகத் துடைத்துக் கொண்டு, அதிதமாக சிவந்து போகும்படியாகச் செய்து கொண்டு சொன்னார்.

''ஏன், உன் கல்யாணம் மட்டும் எப்படி? ஒவ்வொரு கல்யாணப் பத்திரிகையோடயும், கால் பவுன் காசு கொடுத்து கல்யாணம் அழைச்சது யார்? உங்க அப்பா! அடடா. என்ன உதார குணம்? நான் பார்த்தேனே! இந்த இரண்டு கண்ணாலும் பார்த்தேன். அழைப்பு வாங்கிட்டவர்கள் கை, பலருக்கும் இப்படி நடுங்கியதை நான் கண்டேனே. தெருவில் போகிறவரை கை தட்டிக் கூப்பிட்டு, இந்தா பிடி கால் பவுன்

என்றால் எப்படி இருக்கும், அது மாதிரிதான்.. பல்லி முட்டை மிட்டாய்னு குழந்தைகள் சொல்லுமே.. அது மாதிரி கால் பவுன் காசுகள், உங்க வீட்டுலே குவிஞ்சிருந்ததை நான் கண்டேனே... உன் தோப்பனாரை விடவும் பணக்காரர்கள் நிறைய பேர் இருக்காங்கதான். ஆனா, எத்தனை பேருக்குக் கொடுக்கணும்னு தோணும். அதுதான் விஷயம்."

வாசல் படப்பைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தாள், ஒரு கூடைக்காரி. வரது, 'நாராயணா' என்றார். க்ஷணத்தில் கையில் பிளாஸ்டிக் கூடையுடன் ஆஜர் ஆனான் அவன். என்ன 'சுருக்கு சுருக்காக'க் காரியம் நடக்கிறது என்று வியந்து கொண்டான், ராஜபாண்டி.

வரது எட்டிக் கூடையைப் பார்த்தார். வாழைத் தண்டும், மீதி பாகலும்.

"வாழைத்தண்டை, நல்லா சன்னமா நறுக்கி, தேங்காப்பூ போட்டு கூட்டு பண்ணிடு நாராயணா! பாகலை, பொன்வறுவலா வறுத்துடு. பாகலோடு, நாட்டு நெல்லிக்காய் இருந்தா, அதையும் நாலு போட்டு வறுத்துடு. ரொம்ப நல்லா இருக்கும். என்ன குழம்பு?"

"மொச்சைக் குழம்புங்க ஐயா."

"பேஷ். பண்ணு. ராஜபாண்டி, இந்த வாழைத் தண்டுக்கு என்ன குணம் தெரியுமோ? மூத்திரப் பையில இருக்கிற கல்லையே கரைச்சுடும்! ரொம்ப வீரியமான வஸ்து. வாரத்துக்கு ஒரு வாட்டி, வாழைத்தண்டு, வாழைப்பூ சாப்பாட்டுல சேர்த்துக்கோ. ஒன்னுக்கிருந்தா, ரொம்ப சுகமா இருக்கும்."

கூடைக்காரி, வெட்கத்துடன் சிரித்தாள்.

"என்ன சிரிப்பு, நான் சொல்றது என்ன பொய்யா?"

நாராயணன் வந்து, கூடைக்காரியிடம் நூறு ரூபாய் நோட்டை நீட்டினான்.

"ஐயோ.. காலங்கார்த்தாலே நூறு ரூபாய் நோட்டுக்கு என்கிட்டே ஏது சாமி சில்லறை?"

"சில்லறையா கொடுடா."

"சில்லறையே இல்லீங்க, ஐயா."

"பரவாயில்லை. நான் நாளைக்கு வாங்கிக்கறேன்" என்றாள் கூடைக்காரி.

"சரி. நாளைக்கு வரச்சே, தூதுவளைக் கீரை இருந்தா கொண்டா, பெண்ணே."

"ஆவட்டும். சாமி."

கூடைக்காரி புறப்பட்டாள்.

"ரொம்ப ரொம்ப பிரமாதமா சமைக்கும் உங்க அம்மா. நான் ஆயிரம் முறை அண்ணி கையால சாப்பிட்டிருக்கேனே.. கல்யாணத்துக்கு அப்புறம், சினிமாவை விட்டாச்சு. வீட்டுல என்ன வேலை? புதுசு புதுசா உடுத்தறது, பவிசு பவிசா சமைக்கிறது பொம்மனாட்டிக்கு அது போதும்னுட்டார் உங்க அப்பா..." என்றவர், "நாராயணா" என்று சப்தம் போட்டுக் கூப்பிட்டார். அவன் வந்து நின்றான்.

"இன்னிக்கு என்ன கீரை?"

"தண்டுக் கீரைங்க"

"ரெண்டு பல் பூண்டு போட்டு நல்லா ஒட்டுகிறா மாதிரி கடைஞ்சுடு. ஒரு முட்டை எண்ணெய் விட்டு, நாலு உளுத்தம் பருப்பு, கடுகு போட்டு தாளிச்சுடு. என்ன விதரணை, உங்க அப்பாவுக்குத்தான். திருவல்லிக்கேணியில மட்டும், இருபத்தி நாலு வீடு இருந்துச் சுன்னா பார்த்துக்கோ... அல்லாத்தையும், ஒரு படம் எடுத்துத் தொலைச்சுத் தலை முழுகினார்... எல்லாம் விதி. பதிபக்தின்னு ஒரு படம். நான் தான், அந்தப் படத்தோட புரடெக்‌ஷன் மானேஜர். நல்லா, எட்டு கண்ணும் விட்டு எறிகிற மாதிரி இருந்தவரை, 'படம் எடு படம் எடுன்'னு குழி வெட்டிக் குப்புறத் தள்ளினான், மானா வெட்டி. ஒன்னாம் நம்பர் கேப்மாரி. முடிச்சவிழ்க்கி. குட்டிகளை வச்சுக்கிட்டு டாபர் மாமா வேலை பண்ணிட்டு இருந்த கசட்டு பேமானி. அவன்ட்ட மாட்டினார், உங்க அப்பா. நான் சொல்ல முடியுமோ. நானோ எடுபிடி. சும்மா இருடா நாயின்னு சொல்லுவாரோ, மாட்டாரோ?"

"..........."

"வாயுத் தொல்லை தாங்கலை."

- எழுந்து உள்ளே போனார், வரது.

வேலித் தடுப்பில், ஒரு ஓணான், சிவந்த தலையுடன் வந்து நின்றது. 'ஓகோ' என்று மேலும் கீழுமாகத் தலையை அசைத்தது.

ராஜபாண்டி, அதையே வெறித்துப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தான். அதையும் தாண்டி அவன் பார்வை வெறித்தது. வெயில், வெள்ளையாக சுருள் சுருளாக, தோசைப் பொட்டலம் மாதிரி சுருங்குவது மாதிரி தோன்றியது. மண், மின்னியது. கறிவேப்பிலைக் கிளையில் அமர்ந்திருந்த சிட்டு, 'கிச்கிச்' என்றது.

வரது திரும்பி வந்தார். கால், நனைந்து இருந்தது. இரண்டு பாதங்களையும் சேர்த்துத் தட்டி, மண்ணை உதிர்த்து விட்டு, சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டார்.

"வீடுகள் போச்சு... நகைகள் போச்சு... பணம் போச்சு... போகாதது மானம் மாத்திரம்



தான். ஒரு நாய்க்கு, ஒத்தைப் பைசா பாக்கின்னு ஒரு கழுதைப் பயலும் சொல்ல முடியுமோ? எனக்கே, வீடு தேடி வந்து 'இந்தாடா உன் சம்பளம்'னார். 'அண்ணே, இந்தக் கஷ்டத்துல எனக்கென்ன அவசரம்?'னேன். 'தொழில் சுத்தம் வேண்டும்டா'ன்னார். போகையிலே, வாடகைக் கார்லே போனார். எத்தனை கார் வச்சிருந்தார். படகு மாதிரி, நடிகர்கள்லே முதல் முறையா 'பிளைமவுத்' வாங்கியவர்டா உங்க அப்பா... எல்லாருக்கும் நியாயம் பண்ணுவர், உனக்கு மட்டும் நியாயம் பண்ணலை."

நிமிர்ந்து அவரைப் பார்த்தான் ராஜ பாண்டி.

''புரியலையா? நாலு எழுத்து படிக்க வைச்சிருக்கலாம். உன்னை ரெண்டாம் கிளாஸ்லேயே படிப்பை நிறுத்தி, தன்னோட வச்சுக்கிட்டாரே, அதைத்தான் சொல்றேன். படிச்சு என்ன ஆகப் போகுதுன்னார். இருக்கிற சொத்தைக் கவனிச்சுக்கிட்டா போதும்னார். இருக்கிறதை அவரே அழிச்சார். பொண்டாட்டியைச் சோத்துக்கு அலைய விட்டுட்டு, ஒரே பிள்ளைக்கும், ஒன்றும் பண்ணாமே போய்ச் சேர்ந்தார்... எல்லாம் விதி.. நேற்று, ரேடியோவில 'சாகசம்' பாட்டு வச்சான். கண்ணுல ஜலம் வந்துடுச்சு... யாரை நோகறது சொல்லு..."

வரது, தரையைப் பார்த்தபடி இருந்தார். தரையைக் கண்ணாலேயே தோண்டி, கண்ணப்பாவின் புதைந்து போன வாழ்க்கையைக் கையில் எடுக்கிறது போல இருந்தார்.

வீட்டுக்குள்ளே இருந்து தாளிக்கும் மணம் ராஜ பாண்டி நாசிக்கு வந்து சேர்ந்தது. அவன் பசியை மேலும் உக்ரமூட்டியது. வரது சொன்னது எல்லாம் அவனுக்கும் தெரிந்த கதைதான். பழைய படத்தை இரண்டாம் முறையாகப் பார்க்கிறது மாதிரி



"பி.ஜே.பி.யை வலுவிழக்கச் செய்ய அந்த காங்கிரஸ்காரரிடம் ஐடியா கேட்டேன்..."

"என்ன ஐடியா சொல்றார்?"

"நரசிம்மராவை பி.ஜே.பி. தலைவரா போடச் சொல்றாரு!"

பாஸு



"நம்ம தலைவர் எப்பவும் முன் எச்சரிக்கை உணர்வா செயல்படுவார்ங்கறது ரொம்ப சரியாப்போச்சுங்க..."

"எப்படிச் சொல்றீங்க...?"

"இப்பவே கட்டம்போட்ட டவுசரும், அரைக்கை சட்டையும்; தொப்பியும் போட்டுக்கிட்டு, 'களி' சாப்பிட ஆரம்பிச்சிட்டாரே..."

– ஆர்.பி.செல்வம்

தான், வரது சொன்னது. என்ன பண்ண, கேட்க வேண்டி இருக்கிறதே...

''கடைசியா உங்க அம்மாவை 'மானா' வீட்டுல வச்சி பார்த்தேன். சமையல்காரப் பெண்ணா. என் மனசு உடைஞ்சு போச்சுடா ராஜபாண்டி."

அவர் அமைதியாக இருந்துவிட்டுச் சொன்னார்.

"எல்லாம் விதிடாப்பா விதி. நதி, எந்தத் தடத்துல ஓடணும்னு விதிச்சாச்சு... அதுலதான் ஓடும்... கேவலம் மனுஷ ஜென்மம் என்ன பண்ண முடியும்..."

விடை கண்டுபிடிக்க முடியாத சர்வ கேள்விகளுக்கும் கண்டுபிடிக்கப்பட்ட ஒரே பதிலைச் சொல்லி சமாதானம் செய்து கொள்ள முயன்றார், வரது.

"போகட்டும்... நீ எப்படி இருக்கே?"

உயிர் வந்தவன் போல ராஜபாண்டியன் சொன்னான்.

''வீட்டுக்காரிக்கு நாலு நாளா உடம்புக்குச் சுகம் இல்லை, அண்ணா. அது விஷயமாத்தான் வந்தேன். ஒரு அம்பது ரூபா அவசரமா வேணும்..."

எசகு பிசகாக நாராயணன் தோன்றி, "இலை போட்டாச்சு" என்றான்.

அவனைக் கொன்றால் தப்பு இல்லை என்று நினைத்துக் கொண்டான் ராஜபாண்டி.

''எங்கேடா...? காலைலே இருந்து சில்லறைக்கு அல்லாடறோமே, தெரியல்லை? இன்னொரு நாளைக்குப் பார்ப்போம்..."

வரது, மரத்துப் போன கால்களை உதறிக் கொண்டார். பிறகு, சாவகாசமாக உள்ளே போனார். நாராயணன், இவனைப் பார்த்து விட்டு, உள்ளே சென்று கதவைச் சாத்திக் கொண்டான்.

ராஜபாண்டியன், தெருவுக்கு வந்தான். வேலித் தடுப்பில், இன்னும் அந்த ஓணான் இருந்தது. இவனைப் பார்த்துத் தலையை அசைத்தது.

# ஊழலில் மிதக்கும் இத்தாலி

**ஊழ**ல் நிர்வாகத்தில் உலகின் எந்த நாடும் இத்தாலியிடம் பிச்சை வாங்க வேண்டும். அப்படி ஒரு 'நல்ல பேர்' எப்போதும் இத்தாலிக்கு உண்டு.

முதியோர் இல்லங்களைச் சுத்தப்படுத்த ஒரு காண்ட்ராக்ட். இதில் ஓர் ஆளுங்கட்சி (சோஷலிஸ்ட் கட்சி) உறுப்பினர் பெரிய தொகையைச் சுருட்டிக் கொண்டதாகப் பிடிபட்டார். அப்போது வெளிவர ஆரம்பித்தது இத்தாலி நாட்டின் ஊழல் மகாத்மியம். இது நடந்தது 1992 பிப்ரவரியில்! இன்னும் தொடர்கிறது.

சும்மா சொல்லக் கூடாது. பதவிப் பேதமின்றி அமைச்சர்கள், எம்.பி.க்கள், பிரதமர்கள்- ஏன் நீதிபதிகள்கூட அங்கே 'மிஸ்டர் க்ளீன்' என்ற பட்டத்தை விரும்புவதில்லை.

ரோம், நேபிள்ஸ் போன்ற நகரங்களில் 'தாதா'க்களுக்குச் சில நீதிபதிகளே கருணை காட்டுவதாகவும் செய்திகள் வெளியாயின. அந்த நாட்டு சுப்ரீம் கோர்ட் எட்டு நீதிபதி மீது விசாரணைகூட மேற்கொண்டது!

புகழ் பெற்ற செனட்டர் அன்ட்ரியோட்டி (74 வயது), ஏழு தடவை பிரதமராக இருந்த பெட்டினோ கிராக்ஸி ஆகியோரும் ஊழல் புரிவதில் 'டாக்டர்' பட்டம் வாங்கியவர்களே!

அரசியல்வாதிகள், வர்த்தகப் பெரும்புள்ளிகள், தொழிலதிபர்கள், அரசு உயர் அதிகாரிகள் அனைவரையும் உள்ளடக்கிய 2500 பேர் மீது சந்தேகம். அவர்களில் 1356 பேர் கைது. 1116 பேருக்கு வாரண்டு அனுப்பப்பட்டிருக்கிறது. மொத்தம் மூன்று லட்சத்துப் பதினையாயிரம் கோடி ரூபாய் ஊழல் பணமாக அங்குமிங்கும் உதைபட்டுக் கொண்டிருக்கிறது. இது இத்தாலியைப் பற்றிய 'பெருமை'க்குரிய புள்ளி விவரம்.

இன்னொரு விஷயத்திலும் இத்தாலிக்குத்தான் முதற்பரிசு. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னால் இதுவரை ஐம்பத்து நான்கு அரசாங்கங்கள் அங்கு வந்து போய்விட்டன! ஓர் அரசின் ஆயுட்காலம் சராசரியாக பதினொரு மாதங்கள்தான். இவ்வளவு இருந்தும் இத்தாலி ஐரோப்பிய நாடுகளில் மிகவும் செல்வந்த நாடுகளோடு ஒப்பிடும் வகையிலேயே வளர்ச்சி கண்டு வருகிறது.

**த**ற்சமயம் இந்த ஊழலை எல்லாம் ஒடுக்கவும் ஒழிக்கவும் பூனைக்கு யாராவது மணி கட்டியே தீர வேண்டும் என்ற எண்ணம் நாடு முழுவதும் மக்களிடையே பூதாகரமாக வளர்ந்திருக்கிறது.

ரோமனோ புரோடி இப்போதைய பிரதமர். 56 வயது. கட்சிகள் விவஸ்தையின்றி ஒன்றோடொன்று கூட்டுச் சேர்வது என்பது இத்தாலியில் சர்வ சாதாரணம்!

புரோடி கொஞ்சம் நம்பிக்கை அளிப்பவராகத் தென்படுகிறார். அவரால் மட்டும் என்ன பெரிதாகச் செய்து விட முடியும் என்ற கேள்வியும் கூடவே.

அங்கேயும் வடக்கு வாழ்கிறது - தெற்கு தேய்கிறது கதைதான்.

நார்தர்ன் லீக் என்பது ஒரு பிரிவினைவாதக் கட்சி. செல்வ வளம் மிகுந்த வட இத்தாலி தனியாகப் போய்விட வேண்டும். நோஞ்சான் தெற்கு எப்படியாவது பிழைத்துக் கொள்ளட்டும் என்பது அந்த லீக் தலைவர் லம்பார்டோ போஸின் வாதம்.

இதையெல்லாம் புரோடி சமாளிக்க வேண்டும். ஐரோப்பாவிலேயே அதிக வரி விகிதம் இருப்பது இத்தாலியில் தான். இதையும் மாற்றி அமைக்க வேண்டும். இத்தாலியின் தேசிய பொழுதுபோக்கு என்னவாம் தெரியுமா? வரி ஏய்ப்பது!

புரோடியின் முன்னால் பல சவால்கள். உடனடியாகச் சிலர் கோதாவில் இறங்கியாக வேண்டும். இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறது, 56-வது அரசாங்கம்...!

**— ராணி மைந்தன்**

**Experience the Special Customer Service with Sindhoori Deposit Schemes.**




## HIGHLIGHTS

- Free Master Health check-up at Apollo Hospitals.
- Personal Accident coverage for the first named depositor.
- Concessional terms on Car financing.
- Postdated interest warrants along with Deposit Receipt.
- Outstation repayments will be made by way of demand draft.
- Outstation cheques accepted at par.
- CARE Rated Company.

## SCHEME I FIXED DEPOSITS

| Period of Deposit | Rate of Int. per annum | |
|---|---|---|
| | Monthly | Quarterly |
| 12 months to 60 months | 15% | 15.19% |

## SCHEME II CUMULATIVE DEPOSIT

| Period of Deposit | Maturity amount on every Rs. 3000/- of deposit | Effective Annual yield |
|---|---|---|
| 1 Year | 3,482 | 16.08% |
| 2 Years | 4,042 | 17.37% |
| 3 Years | 4,692 | 18.80% |
| 4 Years | 5,446 | 20.38% |
| 5 Years | 6,321 | 22.14% |

*For full text under Non-Banking Financial Companies & Miscellaneous Non-Banking Companies (Advertisement Rules 1977) refer advertisement released in the Trinity Mirror & Makkal Kural on 18-10-95*

*All Under One Roof*

- Share Shoppe
- Primary & Secondary Finance
- Merchant Banking
- H.P. & Leasing
- Car Finance

**OM SINDHOORI CAPITAL INVESTMENTS LTD.**

**A Part of the Apollo Hospitals Group**

**Registered Office:** Ali Towers, 22, Greams Road, Madras - 600 006. Ph: 8233702, 8233680.
**Branch Offices :** Bangalore - Ph: 2281529 Cochin - Ph: 368401, Hyderabad - Ph: 316335.
(Applications are also accepted at the offices of the various Managers to the Scheme)

**GROWING AS A GROUP**

# நிதியமைச்சர் முயற்சி செய்வாரா?

### ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

♦ நிதி அமைச்சரின் நிலை குறித்த தலையங்கம் சிந்திக்க வைத்தது. ஐம்பது சதவீதம் வரி விதிக்கும்பொழுது வரி ஏய்ப்பினால் வெறும் இரண்டு சதவீதம் தான் அரசுக்குக் கிடைக்கிறது. அதையே ஐந்து சதவீதமாகக் குறைத்தால் எல்லோரும் முழுவதுமாகக் கட்டி விடுவதால் ஐம்பது சதவீத வரியை விட அதிகமான வரி வசூலாகும் என்பது பாமரர்களின் கணிப்பு. வொர்க் அவுட் ஆகுமா என்று நிதியமைச்சர் முயற்சி செய்யலாமே.
சுப்பிராயர்புரம்,
மணிமதியண்ணன்.

♦ அந்நிய முதலீடுகளை அனுமதிப்பதில் பா.ஜ.க. உள்ளிட்ட (உதாரணம் • : என் ரான்) எல்லா கட்சிகளின் நிலையும் ஒரே மாதிரி இருப்பதால், எதிர்க்கட்சி என்பதற்காகவே எதிர்க்காமல், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை மட்டுமே கணக்கில் கொண்டு, நிதியமைச்சரின் எந்த ஆக்கபூர்வமான நடவடிக்கைக்கும் அரசியல் நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தாமல், எல்லா கட்சிகளுமே ஆதரவளிக்க வேண்டும். இப்படி நடந்தால், கேள்விக்குறியாக இருக்கும் நமது பொருளாதாரம், உலகம் வியக்கும் வண்ணம் மாறுவது உறுதி..!
கன்னிப்பாடி, கே. ஸ்டாலின்.

♦ முதியோர் இல்லம் பற்றிய கட்டுரை மனதுக்கு மிகவும் வேதனையளிப்பதாக இருந்தது. வயது முதிர்ந்தோரை முதியோர் இல்லங்களில் சேர்ப்பது கிராமத்தை விட நகரங்களில் அதிகமாகவும், படிக்காதவர்களை விட படித்தவர்கள்தான் அதிகமாக முதியோர் இல்லங்களுக்கு அனுப்புவதையும் இன்று கண்கூடாகப் பார்க்க முடிகிறது. மனிதனின் நாகரிக வளர்ச்சி இதுபோன்று கீழ்த்தரமாகப் போகக் கூடாது.
கொப்பம்பட்டி,
செ. அன்புமதிகோபிநாத்.

♦ பிள்ளைகளுக்காக உழைத்து விட்டு, முதியோர் இல்லத்தில் பணம் செலவு செய்து கொண்டு வாழும் பெரியவர்களுக்கு சின்ன வயதில் பெற்றோர் நிழலில் கிடைத்த சந்தோஷம் மட்டுமே நினைவில் நிற்கும். மற்றவை கானல் நீர்தான். இவர்களிடம் பணம் பறிப்பவர்களைப் பற்றி என்ன சொல்ல? பால் மறந்த மாட்டை இறைச்சியாக்கிக் கொள்பவர்களுக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம்?
சிதம்பரம், என்.எம். கிருஷ்ணா.

♦ வாழ(ா)ப்பாடியை சைபர் என்று துணிச்சலுடன் கூறிய தராசை எவ்வளவு பாராட்டினாலும் தகும்!
அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

♦ காணாமல் போன மீனவர்களை மீட்க எதிர்காலத் திட்டம் இருக்கிறது எனக் கூறும் மீன்வளத்துறை அமைச்சர் ஜெனிஃபர் சந்திரன் சொல்வதோடு நில்லாமல் செயலிலும் நிரூபிக்க வேண்டும். செய்வாரா...? காலம் தான் பதில் கூற வேண்டும்.
விசலூர் - 1,
ஜி. ஜி. கிருஷ்ணன்.

♦ 'ஒரு பெண்ணைத் தேடி...'ச் சென்ற போது... லதா, நீ ஒரு புதுமைப் பெண் மட்டுமல்ல; (சத்தமில்லாத) புரட்சிப் பெண்ணும் கூட.
சென்னை - 49, மயிலை. கோபி.

♦ கேரள சட்டசபையில் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சட்டமன்ற உறுப்பினர்களுக்கு சட்டசபையைப் பற்றி - அரசியலைப் பற்றி பாடம் எடுக்கப் படுக்கிற விஷயம் உண்மையில் பாராட்டத்தக்கது. இதையே மற்ற மாநிலங்களும் கடைப்பிடித்துச் செயல்பட வேண்டும்.
மணலூர்பேட்டை,
பாரதிமுருகன்.

♦ சங்கராச்சார்ய மகாஸ்வாமிகளின் அருள்வாக்கு மிகவும் அருமை. ஜாதிச் சண்டைகள் ஒழிய அவர் கூறும் முறையை அனைவரும் கடைப்பிடிக்க வேண்டும். இதனால் நாடு உயர்வதுடன், எங்கும் ஜாதிக் கலவரங்கள் நிகழாமல் இந்தியா அமைதிப் பூங்காவாகத் திகழும். வீணாகப் பொழுதைக் கழிப்பதும் ஒழியும்.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

♦ எஸ்.டி.எஸ். காட்டிய இரட்டை விரலுக்கு இவ்வளவு அர்த்தமா? சொல்லாமல் சொல்லிய சூரத்தனம் சொல்லில் அடங்காது. தங்கள் கைக்குத் தங்கப் பேனாவே தரலாம்!
பொறையாறு, கானா. கணேசன்.

♦ தம்பதியினரின் மனஸ்தாப எண்ணங்களை மறந்து 'குடும்பத் தேர்' ஒன்றுபட்டு ஓட, 'பசை'யாக குழந்தையின் செயல்கள் உதவுகின்றன என்பதை வெளிப்படுத்திய 'பசை' சிறுகதை அருமை.
ஹரியானா, எஸ். மகேஷ்.

♦ 'காணவில்லை : காதல்' சிறுகதை மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டியது. கதையைக் கொண்டு சென்ற நடை மிகவும் பிடித்திருந்தது. இறுதிக் கட்டத்தில் தியாகு குழந்தைகளை வைத்தே ரஞ்சனிக்கு உணர்த்திய "லவ்" மிக அருமை.
கடலூர் - 1,
சை. சையத் ஷாஹித் அஹமத்.

உங்கள் பக்கத்து வீட்டுக்காரரின் கதை....
ஏன்... உங்கள் கதையாகக் கூட இருக்கலாம்!

# உங்களை வரலாமா?

**கல்கி** ஆகஸ்ட் 4
ஆண்டு மலரில் ஆரம்பம்

*படியுங்கள்;*
*எழுதுவது யார் என்று கண்டுபிடியுங்கள்!*

# தங்க நகையைப் பரிசாகப் பெறுங்கள்!

**26** வாரங்கள் நீடிக்கும் இத்தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வோர் எழுத்தாளர் பெயரில் வெளியாகும். (சும்மா, உங்களைக் குழப்பத்தான்!) ஆனால் 26 அத்தியாயங்களையும் எழுதுவது யாரேனும் ஒருவர்தான்! யார் அவர்? அதைக் கண்டுபிடிக்க வேண்டியதுதான் போட்டி!

கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகும் போட்டிக் கூப்பனில், யார் அந்த எழுத்தாளர் என்பதைக் குறிப்பிட்டு அனுப்புங்கள். சரியாக ஊகித்து எழுதுபவருக்கு தங்கநகை பரிசு! பலர் சரியான விடை எழுதினால் இருக்கவே இருக்கிறது குலுக்கல்! ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணு கூந்தல் தைலம்




100ml. பாட்டிலின் விலை ரூ. 27.00

**குணு** கூந்தல் தைலத்தை தினசரி உபயோகித்தால்

- தலைமயிர் நீண்டு, கறுத்து, அடர்த்தியாய் வளரும்.
- தலைமயிர் உதிர்தல், இளம் பித்த நரை, தலை அரிப்பு, பொடுகு, சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும்.
- ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் ஏற்றது.

இயற்கை தரும் அதி உன்னத மூலிகைகளால் சித்த மருத்துவ முறையில் தயாரிக்கப்பட்டது.

VPP உண்டு. தபால் செலவு தனி ரூ. 15/-.

விபரங்களுக்கு : **நவசக்தி வைத்திய சாலை**

**9J, சுப்ரமணிய நகர் எக்ஸ்டென்ஷன், சேலம் - 636 005.**

இப்போது எல்லா மளிகை, மருந்து மற்றும் ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.

## தனாகர்ஷண எந்திரங்கள் / சக்கரங்கள்

சர்வசக்தி வாய்ந்த முறைபடி தயாரிக்கப்பட்ட இந்த எந்திரங்கள் தங்கள் இஷ்ட சித்தியை உடன் பூர்த்தி செய்கின்றன. செல்வ சூழலை ஏற் படுத்துகின்றன. ஜோதிட ஆகம சாஸ்திர முறையில் தயாரிக்கப்படும் இந்த எந்திரங்கள்/சக்கரங்களுக்கு உலகளவில் பெரும் ஆதரவு ஏற் பட்டுள்ளது.

உங்கள் தேவைக்கு உடன் எழுதி பயன் பெறுங்கள்.



| | ரக்ஷை ரூ. | எந்திரம் ரூ. |
|---|---|---|
| 1 திடீர் லாபம் குபேர தனாகர்ஷணம் | 1000/- | 1500/- |
| 2. வியாபாரம் ஜனாகர்ஷணம் | 1000/- | 1500/- |
| 3 திருமணம் ஸ்வயம்வரா | 750/- | 1250/- |
| 4 புத்ரபாக்யம் சந்தான கோபாலம் | 750/- | 1250/- |
| 5 கல்வி அபிவிருத்தி வாகீஸ்வரி | 750/- | 1500/- |
| 6 சத்ரு உபாதை நிவர்த்தி மகாசூலினி | 750/- | 1500/- |
| 7. நோய,திருஷ்டி தோஷ நிவர்த்தி தன்வந்திரி | ·750/- | 1500/- |
| 8. அதிகாரி வச்யம் ப்ரத்யங்கிரா | 1000/- | 1500/- |
| 9. ஸகல க்ஷேம அபிவிருத்தி மகா சுதர்சனம் | 750/- | 1500/- |
| 10. மஹாலக்ஷ்மி ஸ்ரீ சக்ரா டாலர் | 200/- | 1500/- |

தங்கள் பெயர், நக்ஷத்திரம் தெளிவான விலாசத்துடன் MO/DD SWAYAMVARALAYA (ஸ்வயம்வராலயா) பெயரில் சென்னையில் கிடைக்கக் கூடியதாக அனுப்புதல் வேண்டும். வெளிநாட்டு அன்பர்கள் 100% கூடுதல் தொகை அனுப்பி பெற்றுக் கொள்ளவும். அதிகச் சக்தி வாய்ந்த (SUPER POTENCY) [illegible] தெரிந்து கொள்ளவும்



**ஸ்வயம்வராலயா** (GOVT.REGD)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை – 33. போன் : 425822,4846427

CONSULT DIVINE ASTROLOGER THETIYUR V MAHADEVAN WITH PRIOR APPOINTMENT

# ஓஹ்..ஹாஹ்ஹா...




"ஐந்நூறு கோடியாம்....! சுண்டைக் காய்!.... இரண்டு ஊழலுக்குக் கூட காணாது!"




"எல்லாருக்கும் ஒழுங்கா நடந்துக்கற 'மூட்' வரும்வரை என்னை இங்கே வெளி யில நிற்கச் சொல்லியிருக்காங்க."




"வேற சில பெயர்களைச் சொன்னால் அவங்களை பலியாடுகளாக்க சௌகரிய மாய் இருக்கும்....."

"சார்! இனிமேல் அமைச்சரவைக் கூட் டங்களையெல்லாம் விளையாட்டு மைதா னத்துல தான் நடத்தணும்னு நினைக்க றேன்...."




— இந்தியன் ஃபீச்சர்ஸ் ஸிண்டிகேட்

# 28. சித்திரக் கூடம்

**கா**ஞ்சி அரண்மனையின் அத்தாணி மண்டபத்தில் கண்டகோபாலனுடன் உரையாடிக் கொண்டிருந்த ஆதித்யன் அடுத்த சில கணங்களில் மன்னன் சித்தத்திலோடிய எண்ணங்களை ஊகித்து விட்டானென்றாலும், தன்னையும், தன்னைக் காரணமாக வைத்து தமிழகத்தையும் விழுங்கக் கூடிய அபாயம், ஜல்ஜல்லென்று சதங்கைகள் ஒலிக்க உள்ளே நுழைந்த ஒரு பேரழகியாக இருக்கக் கூடும் என்பதை எதிர் பார்க்காததால், பிரமித்தே போனான்.

கருக்கல் நேரத்து இருளைப் பழித்த அவள் கூந்தல் சற்றுப் பிரிந்து முன்னால் வந்து, அவள் விழிகளின் கருமையைக் கண்டு மயங்கிச் சுருண்டு கிடந்தது. வட்ட நிலவாக வார்க்கப்பட்டிருந்தவள் முகத்தில் மாவடுவைப் பிளந்து வைத்தது போலிருந்த விழிகள் துறுதுறுவென்று அலைபாய்ந்தன. சிவந்து பளபளத்த இதழ்களில் தெரிந்த நீரோட்டம், தேவலோகத்து அமுதத்தைப் பழித்துக் கொண்டிருந்தது. சேர நாட்டுத் தந்தத்தில் கடையப் பட்டது போன்ற அவள் கரங்களில் கிடந்த கற்கள் பதிக்கப்பட்ட வளைகள் சற்று மங்கியே தெரிந்தன! அந்தப் பெண்ணுக்கு இடையென்று ஒன்று இருக்கிறது என்று கூறுபவர்களுடன் வாட்போரிடுவதில் தவறில்லையென்று தீர்மானித்தான் ஆதித்யன். மானின் துன்னல் தெறித்த அவள் நடையில், பாதங்களிலிருந்த சதங்கைகள் கெஞ்சின. அந்தக் கெஞ்சலைக் கேட்டு அவள் சங்குக் கழுத்திலிருந்து இறங்கிய முத்துச்சரம் புரள்வதற்கு இடமின்றி நடுவே சிக்கித் தவித்தாலும் தன் வெண்பற்களைக் காட்டி நகைத்துக் கொண்டிருந்தது.

சோழ தூதராக



**விஷ்வக்சேனன்**

# இந்திர தனுசு

வழக்கமாக வரும் முதியவருக்குப் பதில், வாலிபன் ஒருவன் அமர்ந்திருப்பதைக் கண்ட அந்தப் பெண்ணின் துள்ளல் நடை சட்டென்று நின்று தயங்கியது. முகத்திலிருந்த இரு கருவண்டுகளும் சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டன. கன்னங்களில் ஒரு செம்மை படர்ந்தது.

ஆதித்யனின் பிரமித்த பார்வையையும் அந்தப் பெண்ணின் சிவந்த முகத்தையும் கவனித்த கண்டகோபாலன், தான் தீர்மானித்த முடிவு சரியானதுதானென்பதை உறுதி செய்து கொள்ளும் உத்தேசத்துடன் அவளை அழைத்தான்: "ஸ்வர்ணமுகி, ஏன் தயங்குகிறாய்? இவர் புதிதாக வந்திருக்கும் சோழ தூதர்..." என்றவன் ஆதித்யனை நோக்கித் திரும்பி, "இவள் ஸ்வர்ணமுகி, என் ஒரே மகள்" என்று அறிமுகப்படுத்தவும் செய்தான்.

பாதங்களில் ஒலித்த சதங்கைகள் ரகசியம் பேச, மெள்ள நெருங்கியவளின் கரங்கள் உயர்ந்து கூப்பின. "சோழ தூதருக்கு வணக்கம்" என்று அவள் குரலும் மிழற்றலாகவே வந்தது. அவளை அருகில் அமரப் பணித்த கண்டகோபாலன் கேட்டான்: "சோழ தூதரே, நான் சோழ நாட்டுக்குப் பலமுறை வந்திருக்கிறேன். ஆனால் இதுவரை கண்டதேயில்லையே?"

ஆதித்யனின் பதில் சாவதானமாக வந்தது. "நான் தஞ்சைக்குத் தெற்கே பாண்டவ ஆற்றின் கரையிலிருக்கும் சிற்றரசைச் சேர்ந்தவன். ஒரு வகையில் மன்னருக்கு உறவினன். உறவினர்கள் அரசியலில் கலந்து கொள்வதில் சங்கடங்கள் ஏற்படுமென்பதால் நான் தலைநகருக்கு அதிகம் வருவதில்லை."

"நினைத்தேன். உங்கள் முகத்தில் அரச வம்சத்துக்களை தெரிகிறது. விஜயனும் உங்களை இளவரசனென்று அழைப்பதாக வீரர்கள் கூறினார்கள். தங்களை ஆதித்ய சோழர் என்றும் விஜயன் கூறினான்" என்ற மன்னன், தொடர்ந்து, "உறவினர்களிடம் அதிகாரங்களை அளிக்க விரும்பாததால்தான் சோழ மன்னர் யாரோ துறவியாரிடம் சகலவற்றையும் ஒப்படைத்துவிட்டு ஆலயங்களிலேயே காலம் கழிக்கிறாரா?" என்றான்.

சற்றுத் தயங்கிய ஆதித்யன், "ஆம். உண்மைதான். துறவியார்தான் மன்னரின் சார்பாக என்னைத் தூதனுப்பினார்" என்றான்.



## ராஜாங்க ரகசியம்!

இத்தாலி நாட்டின் சர்வாதிகாரியான முசோலினி இருந்த போது நடந்தது, இது...

அரசியல் இரகசியத்தை அம்பலப்படுத்தியதாக ஒருவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. அவரைத் தூக்கில் போட இரு வீரர்கள் அழைத்துப் போனார்கள். அப்பொழுது ஒருவர், ''இவர் என்ன அரசாங்க இரகசியத்தை அம்பலப்படுத்தி விட்டார்?'' என்று கேட்டார்.

மற்றொரு இராணுவ வீரர் சொன்னார் :

''நம் தலைவர் முசோலினிக்கு மூளையில்லை என்று சொல்லிவிட்டார்!''

ஆதாரம் : நகைச்சுவை நந்தவனம்
தகவல் : எஸ்.எஸ். பூங்கதிர்

---

"சோழ நாட்டில் நிகழ்ந்தவற்றை எமது ஒற்றர்கள் கூறினார்கள். சோழ எல்லையில் போசளர் படை அழிக்கப்பட்டதாகவும் தற்போது எல்லை நெடுக பாண்டியர் படை உலவுவதாகவும் அறிந்தேன். ஆனால் இப்போது எமது ஒற்றர்களால் எல்லையை நெருங்கவே இயலவில்லை. தாங்கள் எப்படி பாண்டியர் படைகளைக் கடந்து வந்தீர்கள்?" கண்டகோபாலன் குரலில் இலேசாக சந்தேகம் ஒலித்தது.

மன்னனின் நியாயமான அந்த சந்தேகத்தைக் கவனித்த ஆதித்யனின் முகத்தில் முறுவல் ஒன்று பிறந்தது. எந்த சந்தேகத்தையும் உடைக்கும் அந்த விளையாட்டுப் பிள்ளை போன்ற முகமும், எந்த உணர்ச்சிகளையும் காட்டாமல் முறுவலிக்கும் திறனும் பிற்காலத்தில் பெரும் சாதனைகளை ஏற்படுத்தியதென்றால் அதற்கு அத்தாட்சி அப்பொழுதே தெரிந்தது ஆதித்யன் முகத்தில்.

அதே முறுவலுடன் பதிலளித்தான் ஆதித்யன்: "மன்னா என்னை அழைத்து வந்தவன் விஜயன். சோழ ஒற்றர் படைத்தலைவன். அவன் பெய்யும் மழையின் நீர்த் துளிகளுக்கிடையே புகுந்து நனையாமல் வரக் கூடியவன். தாங்கள் அறியாததா?'' என்ற ஆதித்யன் தொடர்ந்து, "தாங்கள் கூறியவை உண்மைதான். நாட்டில் நடக்கும் போரின் முடிவுக்குக் காத்திருப்பதாக துறவியார் எண்ணுகிறார். அந்தப் போர் முடிந்தவுடன் பாண்டியர் சோழ நாட்டை நோக்கித் திரும்பலாம் என்றும் எதிர்பார்க்கிறார்."

கண்டகோபாலன் முகத்தில் சிந்தனை படர்ந்திருந்தது.

ஆதித்யன் தொடர்ந்தான்: "சோழ நாட்டின் படைபலம் தற்போது வெறும் காவற்படைகள் தாம். இந்த நிலையில் உங்கள் உதவியை எதிர்பார்க்கிறார் துறவியார்."

கண்டகோபாலனின் சித்தம் வேறுவிதமாக இயங்கியது. படைபலமற்ற சோழ மன்னனுக்கு உதவிக்குச் சென்று, மெல்ல சோழ நாட்டில் வேரூன்ற இந்த சோழ தூதரைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தான் அவன். காகதீயரின் பிரதிநிதியாகத் தானிருப்பதை விடுத்து, சோழ நாட்டின் மன்னனாக இருக்க அவன் கொண்டிருந்த கனவுக்குச் சாதகமான சூழ்நிலை ஏற்பட்டு விட்டது என்றே நினைத்தவன், எதிரிலிருந்த வாலிபனை ஏறெடுத்து நோக்கினான். வாலிபனாகவும் வீரனாகவும் தெரியும் இந்த சோழ தூதன் சோழ மன்னரின் உறவினன் என்றும் கூறுகிறான். சோழ ராஜேந்திரனுக்குப் பிறகு நேர் வாரிசு எவருமில்லை. ஸ்வர்ணமுகியை இவனுக்கு மணமுடித்து இவனை சோழ அரியணையில் அமர்த்தினால் மக்கள் ஆதரவும் கிட்டும். மெள்ள சோழ நாட்டை வசப்படுத்துவதும் சாத்தியமாகும் என்று திட்டமிட்டான் கண்டகோபாலன். சோழ தூதனும் ஸ்வர்ணமுகியும் தனியொரு உரையாடலில் ஈடுபட்டிருப்பதை தன் சிந்தனையினூடேயும் அவன் கவனிக்கத் தவறவில்லை.

அருகில் அமர்ந்திருந்த ஸ்வர்ணமுகியின் அழகிய நீண்ட விரல்களையும், விழியோரத்தில் நாணத்தையும் மீறித் தெரிந்த கனவுச் சாயையையும் கவனித்த ஆதித்யன், "காஞ்சியின் இளவரசிக்குக் கலைகளில் நல்ல ஆர்வமிருப்பதாகத் தெரிகிறது" என்றான்.

ஸ்வர்ணமுகியின் விழிகளில் வியப்பு தெரிந்தது. "எப்படிக் கண்டறிந்தீர்கள்?" என்றாள் அவள் கிள்ளைக் குரலில்.

ஆதித்யன் மெள்ள நகைத்தான். பதவியை விரும்பவர்களை இணங்க வைக்க அவர்களின் அன்புக்குரியவர்களை எதிரிலேயே புகழ்வதும் ஒரு வழியென்பதை அறிந்திருந்தவன், தன் புகழ்ச்சி வலையைப் பலமாகவே வீசத் தொடங்கினான்.

"இளவரசி, உங்கள் விழிகளில் கனவு மிதக்கிறது. இத்தனை அழகிய நீண்ட விரல்கள் தூரிகை பிடிப்பதற்கென்றே படைக்கப்பட்டவை. தவிர, ஒரு கவிஞனுக்கு இன்னொரு வரை அடையாளம் காண்பது ஒன்றும் அத்தனை சிரமமல்ல."

கண்டகோபாலன் முகத்திலும் குரலிலும் பெருமை தெரிந்தது. "உண்மைதான் ஆதித்யரே,




# மந்தவெளி பெனிபிட் பண்ட் லிமிடெட்

காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை முதலீடு
செய்யவும் முடியும் சுலபமாகத் திரும்பப் பெறவும் முடியும்

பாதுகாப்புப் பெட்டக வசதி உண்டு

பிக்செட் டெபாசிட், ரெக்கரிங் டெபாசிட் மற்றும் சேமிப்பு கணக்குகளுக்கு நியாயமான அதிக விகிதத்தில் வட்டி வழங்கப்படும்.

நகை கடன் மற்றும் மாநகர எல்லைக்குட்பட்ட வில்லங்கமில்லாத சொத்துக்களின் பேரில் கடன்கள் வழங்கப்படும்.

க. பொன்னுசாமி
*தலைவர் மற்றும் நிர்வாக இயக்குனர்*
*Phone : (Per.) : 493 8252*

| | | |
|---|---|---|
| ***Main Branch*** | : | 'P.A. Building, 42, Venkatakrishna Road,<br>Madras - 600 028.<br>✆ : 493 8314, 493 8315, 493 8316 |
| ***Egmore*** | : | 'P.A. House', 32A Halls Road,<br>Egmore, Madras 600 008.<br>✆ : 826 4422 / 33 |
| ***Anna Nagar*** | : | Plot 1652 H , II Avenue,<br>(Opp. Anna Nagar Post Office),<br>Madras - 600 040.<br>✆ : 628 5543 |
| ***Chrompet*** | : | 81, Radha Nagar Main Road,<br>Chrompet, Madras - 600 044.<br>✆ : 402178. |
| ***Porur*** | : | 300-B, First Floor, Trunk Road, Porur,<br>Madras - 600 116. |




**P.A. CONSTRUCTION GROUP**

* Transaction with members only.

இவளுக்குச் சிற்பங்களிலும் சித்திரங்களிலும் பித்து அதிகம். அரண்மனைக்குள் ஒரு சிற்பக் கூடமே உருவாக்கி வைத்திருக்கிறாள்."

முகம் மகிழ்ச்சியால் மலர்ந்திருக்கத் தனது கரங்களை ஒரு முறை பார்த்துக் கொண்ட ஸ்வர்ணமுகி, தன் இரு கரங்களையும் அவன் முன்பாக நீட்டினாள். "இந்தக் கரங்கள் வேறென்ன தெரிவிக்கின்றன தூதரே?" என்றும் கேட்டாள்.

"கரங்களைப் பார்த்து மேற்கொண்டு கூற எனக்கு சோதிடக் கலை அவ்வளவாகத் தெரியாது இளவரசி...." என்று இழுத்த ஆதித்யன் "இருந்தாலும்..." என்படியே மன்னன் முகத்திலும் ஸ்வர்ணமுகியின் முகத்திலும் பொங்கிய ஆர்வத்தையும் ஆவலையும் கவனித்தான்.

அடுத்து செந்தாமரையைப் பிரித்து வைத்தது போலிருந்த அவள் கரங்களையும் அதில் ஓடிய ரேகைகளையும் கவனித்தவன், "இளவரசி.... ம்ஹ¬ம்.... ஆகா!" என்று இருவரின் ஆவலையும் சற்று தூண்டவும் செய்தான். ஸ்வர்ணமுகியின் விழிகள் ஜொலித்தன.

"இளவரசி, நடுவிரலை நோக்கி வரும் இந்த ரேகை ராஜயோகத்தைக் குறிக்கிறது. இந்தச் சந்திரமேட்டில் தெரியும் வளைவு, கடல் கடந்தும் உங்கள் கலைபரவும் என்பதைக் குறிக்கிறது. இந்த குரு மேட்டில் இருக்கும் குறிகள் உங்கள் திருமணத்தைக் குறைந்தது மூன்று முடி மன்னர்கள் சேர்ந்து நடத்தி வைப்பார்கள் என்று தெரிவிக்கின்றன" என்றான்.



"தலைவர் மேலே ஏகப்பட்ட வழக்கு இருந்தும் கொஞ்சமாவது கலங்கணுமே!"

"எப்படி சொல்றே?"

"லேட்டஸ்டா பிறந்த குழந்தைக்கு 'சம்மன்'னு பேர் வைச்சிருக்காரே!"

— எஸ். முகம்மது யூசுப்

ஸ்வர்ணமுகியின் முகத்தில் நாணத்தையும் கண்டகோபாலன் சித்தத்தில் கனவுகளையும் விரிய வைத்தன ஆதித்யனின் சொற்கள். அவர்கள் மகிழ்ச்சியின் குறுக்கே புகுந்தது வாயிலிலிருந்து உள்ளே நுழைந்த வீரனின் குரல்: "பிரபு, பிரபு!"

அந்த வீரனை நோக்கிச் சட்டென்று திரும்பிய கண்டகோபாலனின் முகம் மாறியது. "உன்னை யார் வரச் சொன்னது உள்ளே?" அவன் குரலில் கடுமை ஒலித்தது.

"மன்னிக்க வேண்டும் பிரபு. பொத்தப்பியிலிருந்து நமது ஒற்றன் முக்கியச் செய்தியுடன் உடனே தங்களைக் காண வேண்டுமென்று வந்து நிற்கிறான்" என்றான் வீரன்.

கண்டகோபாலன் முகத்தில் கடுமை இன்னும் அதிகரித்தது. சட்டென்று பிரயத்தனத்துடன் முகத்தை மலர வைத்துக் கொண்டவன் மகளை நோக்கித் திரும்பி, "ஸ்வர்ணமுகி, ஆதித்யரை அழைத்துச் சென்று உனது சிற்பக் கூடத்தைக் காட்டு மகளே!" என்றான்.

ஆதித்யனுக்குப் புரிந்தது. சிந்தித்தபடியே ஸ்வர்ணமுகியுடன் நடந்தான் அவன். ஸ்வர்ணமுகியின் நடையில் மீண்டும் துள்ளல் தெரிந்தது. அவளுடன் சிற்பக் கூடத்தில் நுழைந்த ஆதித்யன், உண்மையில் பிரமித்தே போனான். ஆர்வமுள்ள ஒரு பெண்ணின் தனி முயற்சியில் இத்தனை சிறப்பாக ஒரு கலைக்கூடம் உருவாகக் கூடுமென்பதை எதிர்பார்த்திராத அவன், அவளை மனதாரப் பாராட்டவும் செய்தான். நிகரில்லாத தமிழகத்தின் சிற்பங்களும், சாளுக்கியரின் கலையும், வடநாட்டுக் கலையும், கடாரத்து, காந்தாரத்துப் பதுமைகளும், சீனத்துச் சிற்பங்களும், யவன காவல் வீரர் பதுமைகளும் சிறுசிறு வடிவங்களில் செதுக்கப்பட்டு அங்கு சேர்த்து வைக்கப்பட்டிருந்தன. அந்த சீனத்துப் பதுமைகளினிடையே சீறும் கடல் நாகம் ஒன்றும் இருந்தது.

ஆதித்யனின் விழிகள் அந்தக் கடல் நாகத்தின் மீதும் தன் மீதும் மாறிமாறிப் பதிவதையும் அவன் சித்தம் எங்கோ பறப்பதையும் கவனித்த ஸ்வர்ணமுகி, "ஏன் அந்தக் கடல் நாகத்தை உற்றுப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்கவும் செய்தாள்.

பார்வை அந்தச் சிற்பத்தின் மீதே பதிந்திருக்க, "யுவான்" என்று முணுமுணுத்தான் ஆதித்யன்.

"யுவான்?" என்று தானும் அந்தப் பெயரை உச்சரித்த ஸ்வர்ணமுகி "யார் அவர்?" என்றாள்.

"எனது நண்பர். சீனத்துச் சிற்பி. எங்கள் அரண்மனை சிற்பக்கூடத்தில் இதே பதுமையொன்றை அவர் வடித்து அளித்திருக்கிறார். ஆனால் அது எழுந்து சீறும். நடந்தும் வரும்."

ஸ்வர்ணமுகியின் விழிகளில் அதீத வியப்பு தெரிந்தது. "என்ன? பதுமை சீறுமா? நடந்து வரவும் செய்யுமா?" என்றாள் அடங்காத வியப்புடன்.

"ஆம். இது அவரது சீன அரச குடும்பத்தின் சின்னம். இதைப் பதக்கமாகவும் அணிந்திருப்பார்."

ஸ்வர்ணமுகியின் விழிகளிலும் குரலிலும் ஆவல் தெறித்தது. "அவரை காஞ்சிக்கு ஒரு முறை அழைத்து வருகிறீர்களா?" என்றாள் கெஞ்சும் குரலில்.

''அவசியமில்லை.'' ஆதித்யன் பதில் உடனே வந்தது.

"ஏன்?"

"இன்னும் சில தினங்களில் அவரே இங்கு வருவார்" என்ற ஆதித்யன் சித்திரங்களிருந்த பகுதியை நோக்கி நடந்தான்.

அந்தப் பகுதி ஸ்வர்ணமுகியின் கை வண்ணத்தில், நிலவும், வானும், மலையும், அருவியும், கடலும் கலமும், வனமும் வயலும், பறவைகளும் மனிதர்களுமாகப் பல வண்ணங்களில் நிறைந்து கிடந்தது. ஆதித்யன் கூறிய திருத்தங்களையும், பாராட்டுதல்களையும், புதிதாக சில வண்ணக் கலவைகளை உருவாக்கும் உபாயங்களையும் பிரமிப்புடன் ஏற்றுக் கொண்ட ஸ்வர்ணமுகியின் முகம் மகிழ்ச்சியில் அசல் ஸ்வர்ணமாகவே மின்னியது. அடையாளம் தெரியாத பல மனிதர்களின் சித்திரங்களைப் பார்த்தபடியே நடந்த ஆதித்யன் சட்டென்று நின்றான். அவன் எதிரேயிருந்த சிலையில் சிற்றரசர்களாகத் தோன்றிய ஒரு முதியவனும் இளைஞனும் மண்டியிட்டுக் கிடக்க, கண்டகோபாலன் ஒரு காலை அவர்கள் முடிமீது வைத்து, கரத்தில் வாளுடன் கம்பீரமாக நின்றான். பின்புறத்தில் ஒரு போர்க்களமும் தெரிந்தது.

ஸ்வர்ணமுகி விளக்கினாள்: "இவர்கள் பொத்தப்பி சிற்றரசர்கள். இரு ஆண்டுகளுக்கு முன்பு தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து அடக்கப்பட்டதைத் தீட்டியிருக்கிறேன். தற்போது மீண்டும் அவர்கள் தந்தைக்கு எதிராகக் கிளம்பியிருப்பதாகக் கேள்வி."

ஆதித்யனின் சித்தத்தில், சற்று நேரத்திற்கு முன் ஒரு வீரன் கண்டகோபாலனிடம் வந்து கூறியவை நினைவுக்கு வந்தன. அவன் புத்தி துரிதமாக இயங்கத் தொடங்கியது. ஸ்வர்ணமுகியுடன் வெளியே வந்தவன், அவளிடம் விடைபெற்றுக் கொண்டு தன் அறையை நோக்கி நடந்தான்.

**வி**ஜயனின் விஷமக்குரல் ஆதித்யனை வரவேற்றது: "இளவரசர், கண்டகோபாலனுக்கு மிக நெருங்கியவராகி விட்டதாகத் தெரிகிறது!"

"ஆம்!" என்று ஒப்புக் கொண்ட ஆதித்யன், "விஜயா, அடுத்து நாம் எங்கு செல்ல வேண்டும்?" என்று வினவினான்.

"காகதீயர் தலைநகருக்கு" என்றான் விஜயன்.

"வேண்டாம் விஜயா. காகதீய மன்னனை நாம் இரு தினங்கள் தாமதித்தே சந்திக்கலாம்" என்றவன், "உனக்கு பொத்தப்பிக்கு விரைவாகச் செல்ல வழி தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும் இளவரசே, அங்கு நம் சோழ நாட்டவர் கூட சிலர் இருக்கிறார்கள். ஆனால்..." இழுத்தான் விஜயன்.

"சோழ நாட்டவர்கள் அங்கு என்ன செய்கிறார்கள்?"

"இளவரசே, பொத்தப்பி மன்னன் மகா முரடன். ஆனால் சாப்பாட்டுப் பிரியன். சோழ நாட்டுப் பரிசாரகர் கரங்களுக்கு அவன் அடிமை. சோழ நாட்டு உணவிற்காகவே பலரைப் பணியில் அமர்த்தியிருக்கிறான். ஆனால் அங்கு எதற்குச் செல்ல வேண்டும்?"

''காரணமிருக்கிறது விஜயா'' என்ற ஆதித்யன், வாயிலிலிருந்த வீரனை அழைத்து, தூரிகையும், வண்ணக் கலவைகளும் கொண்டு வரப் பணித்தான். சோழ தூதர் எதைக் கேட்டாலும் அளிக்கும்படி உத்தரவிருந்ததால், ஆதித்யன் கேட்டவை உடனே வந்தன.

அன்று இரவு கண்டகோபாலன் அளித்த விருந்துக்குப் பின் திரும்பிய ஆதித்யன், தூரிகையும் கையுமாக நின்றான். இரவு ஏறிய பின்னும் நெடு நேரம் அவன் ஏதோ தீட்டிக் கொண்டிருப்பதைக் கண்ட விஜயன், ஒன்றும் புரியாமல் அந்த சித்திரத்தை விழித்துப் பார்த்தபடி நின்றிருந்தான்.

அதே இரவில், காஞ்சிக் கோட்டையிலிருந்து, காகதீய ருத்ராம்பாளின் ஒற்றன், சோழ தூதர் பற்றிய செய்தியை அறிவிக்க காகதீயரின் தலைநகரை நோக்கி விரைந்து கொண்டிருந்தான். அது போதாதென்று காஞ்சிக் கோட்டையின் தெற்கிலும் சிலகாத தூரத்தில் ஆதித்யனை அடியோடு ஒழித்து விடக் கூடிய சதி ஒன்றும் உருவாகிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



''இந்த கல்லூரி அட்மிஷனுக்காகப் பிரதமரிடமிருந்து சிபாரிசுக் கடிதம் வாங்கி வந்தேன்.''

''உடனே இடம் கொடுத்துட்டாங்களா...?''

''இல்லே. அதில் நரசிம்மராவ் கிட்டே.. **'forwarded'**ன்னு எழுதச் சொல்லி கையெழுத்து வாங்கிவரச் சொல்லிட்டாங்க!''

— இரா. திலீப்

# மேனேஜ்டே

"**நா**ளைக்கு நீங்க லீவு போடறீங்க."

சாம்பாரை தட்டில் ஊற்றியபடியே உத்தரவிட்டாள்.

"என்ன? ஓ.... லீவா? எதுக்கு? யாராவது வி.ஐ.பி வராங்களா?

"ஆமாம். நாம இணையறதுக்குக் காரணமாய் இருந்த வி.ஐ.பி."

"யாரு, தரகரா?"

என் கேலிக்கு, முறைத்தாள்.

"நாளைக்கு நம்ம கல்யாண நாள். பத்தாவது ஆனிவர்சரி. நிறைய திட்டம் போட்டிருக்கேன். முதல்ல கோயில், அப்புறம் ஹோட்டல் டின்னர், சினிமான்னு ப்ரோக்ராம் வைச்சிருக்கேன்"

"முக்கியமான ஒண்ணை விட்டுட்டியே."

என் கண் சிமிட்டல் புரிந்து வெட்கப் பட்டாள்.

"நாளைக்கு லீவு நீங்க. ஓகே?"

"உத்தரவு! காலையிலே போன் பண்ணி ஆபீஸ்லே சொல்லிடலாம்.

இப்ப ஏதும் அட்வான்ஸாய் உண்டா?

"வழியாம போய் கை கழுவுங்க."

**கா**லையில் போன் வந்தது ஹெட் ஆபிசிலிருந்து.

ஃபாரின் டெலிகேட்ஸ் விசிட். எங்கள் எம்.டி.யும் வருகிறார். திடீர் ப்ரோக்ராம் மாறுதல். இன்றும், நாளையும் மூச்சு விட முடியாது.

ஏமாற்றத்தில் முகம் தொங்கிப்போன நீலாவின் புலம்பலையும் மீறி, என் காதில் விமானத்தின் சத்தம். ஓடினேன் ஏர்போர்ட்டுக்கு. பாவம் நீலா.

ஆறே கால் அடி உயரத்தில் 'ஹஷ், புஷ்' ஆங்கிலத்தில் இரண்டு பேர் வந்தனர். அவர்கள் முன் எங்கள் எம்.டி. மிகவும் குள்ளமாகத் தெரிந்தார்.

மதியம் பன்னிரண்டு மணிக்குள் ஆபீசை தலைகீழாக மாற்றி, புத்தம் புது பொலிவைக் கொண்டு வந்தேன்.

புது ப்ராடக்ட் கொலாபரேஷன். கான்பரன்ஸ் ஹாலில் மீட்டிங். எம்.டி. ராஜ மரியாதை கொடுத்தார் அவர்களுக்கு.

பாலி எதிலின், ஃபைபர் என்று சிறிய ப்ரொஜக்டர் மூலம் அந்த வெள்ளைக்காரன் தங்கள் ப்ராடக்டை விளக்கிக் கொண்டிருந்தான்.

அல்வாவை வாய்க்குள் போட்டு மெல்லுவதைப்போல ஆங்கிலத்தை மென்று கொண்டிருந்தான் வெள்ளைக்காரன்.

எனக்குள் அடிக்கடி நீலாவின் முகம் தோன்றி மறைந்தது

பாவம் அவள்! எவ்வளவு ஆசையாய் திருமண நாளைக் கொண்டாட திட்டமிட்டிருந்தாள்?

என்ன செய்வது?

பிரைவேட் கம்பெனி.

அதிலும் ப்ராஞ்ச் மானேஜர் நான். சம்பளம் கொடுக்குமளவுக்கு, உழைப்பையும் கொடுத்தாக வேண்டுமே.

"இட் இஸ் வெரி யூஸ்ஃபுல் இன் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ். அவர் ப்ராடக்ட் ப்ளேஸ் எ வைடல் ரோல் இன்..."

அல்வாவை இன்னும் வேகமாய் மென்று கொண்டிருந்தான்.

சடக்கென கான்பரன்ஸ் ஹால் லைட் எரிந்தது. முடித்து விட்டான் டெமான்ஸ்ட்ரேஷனை.

"ஹௌ ஈஸ் இட்?"

## கிருஷ்ணா

எம்.டி. என்னைப் பார்த்தார்.

"ஓகே!"

ஒப்பந்தம் கையெழுத்தானது. எம்.டி.யும் வெள்ளைக்காரர்களும் கை குலுக்கிக் கொண்டனர்.

நாளை மதியம் இரண்டு மணிக்கு ஃப்ளைட்.. அதற்குள் ரிப்போர்ட் தயாரித்தாக வேண்டும். ரிப்போர்ட் எழுத வேண்டுமென்றால், அந்த ப்ராடக்ட் பற்றியும், சாதக, பாதகம் பற்றியும் உள்வாங்கி யோசிக்க வேண்டும்.

பி.ஏ.வை அழைத்தேன். பம்பரமானது

ஆபீஸ் முழுவதும்.

இரவு ஒன்பது மணியாகிவிட்டது அன்றைய கச்சேரி முடிய. முத்துக்கள் ரெடி. நாளை காலை வந்ததும் கோத்துவிட்டால் போதும். கொத்துக் கொத்தாய் இருந்த விவரங்களைச் சேர்த்தால் ரிப்போர்ட் ரெடி.

நல்ல ப்ராடக்ட் என்றுதான் தோன்றியது. நிச்சயம் கம்பெனியின் மதிப்பு உயரப் போகிறது ஷேர் மார்க்கெட்டில்.

"முரளி, புரிஞ்சதா எல்லாம்? நாளைக்கு வந்ததும் நீங்களும், அறுபமாவும் இந்த

என் டென்ஷன் வெடித்துவிட்டது. முரளி சுருங்கிப் போன முகத்துடன் மன்னிப்புக் கேட்டான்.

அடுத்த பத்து நிமிஷத்தில் ஆபீசை விட்டு வெளியே வந்தேன்.

காரை எடுக்கும்போதுதான் கவனித்தேன். ஸ்கூட்டரை உதைத்துக் கொண்டிருந்தான் அவன்.

"முரளி!"

அழைத்தேன். பாவம், மிகவும் கடித்துவிட்டேன். சின்சியர் ஆள் இவன்.

"என்ன சார்?"



ரிப்போர்ட்டை லேசர் பிரிண்டில் அழகாய் புக்லெட் மாதிரி தரணும். காலையில் பதினோரு மணிக்கு என் டேபிளில் இது இருக்கணும்...."

நிம்மதியாய் மூச்சு விட்டேன். மூளைக்கு ஓய்வு கிடைத்ததும், மனசு விழித்துக் கொண்டது.

நீலா சாப்பிட்டாளா, இல்லையா? நடுவில் வீட்டிற்கு போன் செய்து கேட்டிருக்கலாமே! இந்த டென்ஷனில் அது மறந்துவிட்டதே. வீட்டுக்குப் போகும்போது ஏதாவது வாங்கிப் போகலாமா?

முரளி தயங்கி நிற்பது கண்டேன்.

"என்ன? எதும் சந்தேகமா?"

"இல்லை...அது... ஒரு மணி நேரமாவது பர்மிஷன் வேணும் நாளைக்கு!"

"வாட்? கோ டு ஹெல் மேன்! மொத்தமாகவே நின்னுக்கறியா? டெர்மினேஷன்தான், ஜாக்கிரதை."

ஸ்கூட்டரை தள்ளியபடி அருகில் வந்தான்.

"சாரி! ரொம்பவும்...'

"ஓகே, பரவாயில்லை சார்."

"எதுக்கு பர்மிஷன் வேணும்?"

"நாளைக்கு என் மேரேஜ் டே. காலையிலே கோவிலுக்குப் போகணும்னு மனைவி ஆசைப்பட்டாள். முழுநாள் லீவு கேட்டால் தப்புன்னு தெரியும். ஆபீசே தீப்பத்திக்கிட்ட மாதிரி பரபரன்னு இருக்கே. அதனாலேதான் ஒன் அவர் பர்மிஷன்....."

நீலாவின், ஏமாற்றத்தில் தொங்கிப் போன முகம் நினைவில் எழுந்தது.

முகம் தெரியாத இவன் மனைவி மேல் பரிதாபம் மூண்டது.

"ஓகே! என்ஜாய் யுவர் மேரேஜ்டே. ஒரு மணி நேரம் பர்மிஷன் எடுத்துக்க."

வாழ்த்தியபடி கை கொடுத்தேன்.



# தமில் ஒரு அவார்ட்!

கவிஞர் தமிழ் மொழிப் பித்தனுக்கு அந்த செய்தியை நம்ப முடியவில்லை.

"மெய்யாலுமா சொல்றீங்க?" என்று தொலைபேசியில் அவர் கேட்க,

"அட, கன்ஃபாம்டு நியூஸ்னு சொல்றேன்... நம்பாட்டா எப்படி... புரொட்யூஸர்ங்கிற முறையிலே எனக்கு தெரிவிச்சிட்டாங்க. 'மதுரைக்கு தெக்காலே' பட்டப்பாட்டுக்குதான் அவார்ட்டாம். உங்களுக்கு தகவல் வந்திருக்கும்னு நினைச்சுதான் போன் பண்ணினேன். யூ ஆர் லக்கி. பீ ஆன் தி விங்க்ஸ்" என்று தயாரிப்பாளர் கே.பி.கே. தமிழ்மொழிப் பித்தனின் ஆவலைத் தூண்டி விட்டார்.

''என்ன சொன்னீங்க.. கொஞ்சம் திரும்பவும் சொல்லுங்க'' என்று கவிஞர் கேட்க,

"அட... நீங்க பாட்டு எழுதிக் கொடுத்த படத்துக்குதான்...'' என்று அவர் ஆரம்பித்தவுடன்,

"ஸார் நான் அந்தத் தகவலை கேட்கலே... நீங்க இங்கிலீஷ்லே கடைசியா ஒரு வாக்கியம் சொன்னீங்களே, அதை திருப்பி சொல்லுங்க குறிச்சுக்கறேன்'' என்று தன் நாட்குறிப்பை எடுத்து அந்த ஆங்கில வார்த்தையை எழுதிக் கொண்டார்.

"இல்லாடி கவிஞர்தான் போங்க... இப்படி ஒப்பேத்தி எழுதியே இந்த அளவுக்கு வந்துட்டீங்க" என்று பாதி கிண்டலும் பாதி எரிச்சலுமாக சொல்லிவிட்டு கே.பி.கே. கத்தரித்துக் கொண்டார். தமிழ்மொழிப்பித்தன் அதை பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அவார்ட் கிடைத்ததைவிட இரண்டு ஆங்கில வாக்கியங்கள் கிடைத்ததில் அவருக்கு சந்தோஷமாகி விட்டது.

பீச்சிலே கண்டல் பீ ஆன் தி விங்க்ஸ்
பேச்சிலே கிண்டல் பி ஆன் தி விங்க்ஸ்

என்று கற்பனை பீச்சியடிக்க, உடனே அந்த வரிகளை எழுதி, பாதுகாத்து வைத்துக் கொண்டார்.

சமீபகாலமாக தமிழ்மொழிப்பித்தனின் ஆங்கில வார்த்தைகளை எங்கு கேட்டாலும் கண்டாலும் வாரிக் கொண்டு பாடல் வரிகளாக்கும் பித்து அதிகரித்திருந்தது. போதிய வார்த்தைகள் கிடைக்காதபட்சத்தில் டய ... டேன்டெக்ஸ், பப்பட் ஜமால், பிராண்ட் நேம்களையும் விட்டு வைப்பதில்லை.

இந்த ரீதியில் எழுதிய 'மதுரைக்கு தெக்காலே' பாடலுக்குத்தான் அவார்ட் என்று செய்தி வந்தால் அதை கவிஞர் எப்படி ஜீரணிப்பார் சொல்லுங்கள். அதனால் அன்று முழுவதும் தொலைபேசியிலும் நேரிலுமாகப் பலர் கவிஞரைப் பாராட்டிவிட்டதில் அவருக்கு மெய்யாலுமே தான் ஏதோ சத்தான பாடலை எழுதியது போல ஒரு மிதர்ப்பு ஏற்பட்டு விட்டது.

எப்படி பாடலுக்கு அவார்ட் கிடைத்திருக்குமென சற்றே யோசிக்கலானார். அவருக்கு கேஷர்வையாக 'மதுரைக்கு தெக்கால' பாடல்கள் உற்பத்தியான சம்பவங்கள் நினைவிற்கு வந்து விட்டன.

அன்று அந்த இலக்கிய வட்டத்திற்குப் போய் தாறுமாறாகத் தன் தூய தமிழ்ப் பாடல்களுக்கு வக்காலத்து வாங்கிப் பேசியபோது, வட்டத்தில் சிலர் கொதித்தெழுந்து கல்லெறிந்ததில் மல்கோவா சைஸில் கவிஞர் மண்டையில் வீக்கம் ஏற்பட்டு விட்டது. உடனே மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சை பெற்றார். அந்த அடிபட்ட நிலையிலும் ஆஸ்பத்திரியில் அடிபட்ட ஆங்கில வார்த்தைகளை குறிப்பெடுக்கக் கவிஞர் தவறவில்லை.

சிரிஞ்சு, சிரிஞ்சு, சிரபுஞ்சி
ஸ்டெரிலைஸ் செஞ்ச உம்மூஞ்சி

என்று படுக்கையில் மாட்டியிருந்த கேஸ் ஷீட்டில் மடமடவென்று அவர் எழுதிய பாடல் டூட்டி டாக்டரிடம் அவருக்கு திட்டு வாங்கிக் கொடுத்தாலும், ஆஸ்பத்திரிக்கு அவரைத் தேடி வந்த தயாரிப்பாளர் கே.பி.கே.



''டாக்டர், இன்னிக்கு நான் நல்லா இருக்கேன்னா அதற்குக் காரணம் நீங்கதான்.''

''நான் ஒண்ணுமே உங்களுக்குச் செய்யலியே?''

''அதனாலேதான் டாக்டர்...''

-இரா.முத்துவேல்

---

விடமிருந்து துட்டு வாங்கிக் கொடுத்துவிட்டு,

மதுரைக்கு தெக்காலே பிறந்த சுதந்திரப் போராட்ட வீரர் வாழ்க்கையை மையமாக வைத்து பின்னப்பட்ட தன் படத்திற்கு இப்படிப்பட்ட பாடல்கள் கிடைத்தில் மிகவும் பரவசமானார் கே.பி.கே.

அதுபோலக் கவிஞரின்,

'அமிர்தா நெஞ்சம் அமிர்தாஞ்சம்!

ஜானகி மனமோ ஜண்டுபாம்!' என்ற பாடலை எங்கே நுழைப்பது என்று இயக்குநருக்குப் பெரிய தலைவலியே வந்து விட்டது.

இந்த அழகில் தமிழ் மொழிப்பித்தன் அமைத்திருந்த மதுரைக்கு தெக்காலேயின் நாலு பாடல்களில் எதற்கு அவார்ட் என்பது இன்னும் கவிஞருக்குப் புலனாகவில்லை. இரண்டு நாட்கள் இப்படியே ஓடின. தகவல் இன்னும் வந்த பாடில்லை.

இடையில் கவிஞரை நாடி நாலைந்து தயாரிப்பாளர்கள் பாட்டு வியாபாரத்திற்கு வர, இவரோ அவார்டு அடைந்த மமதையில் அநியாய ரேட் கேட்க, அவர்கள் தப்பித்தோம் பிழைத்தோமென்று ஓடிவிட்டனர்.

கவிஞர் பொறுமை இழந்தார். எந்தப் பாடலென்று தெரிந்து தொலைத்தாலும் அதற்கு எதையாவது அர்த்தம் தயாரித்துக் கொள்ளலாம். திடீரென்று டிவி. ராமகிருஷ்ணன் பேட்டிக்கு வந்து விட்டால் பேஜாராகிவிடும் என்று கவிஞருக்குக் கவலை உண்டாகிவிட்டது

சரி எதற்கும் கே.பி.கே. யையே தொடர்பு கொண்டு பேசினால் ஏதாவது. தகவல் கிடைக்மென்று நினைத்தவர், அவருக்கு டயல் செய்தார்.

"ஓகோ கவிஞரா... நானே உமக்கு போன் பண்ணலாம்னுதான் இருந்தேன்'' என்று கே.பி.கே. தொடங்கியதும் தமிழ்மொழிக்கு குதூகலம் பிறந்தது.

''அப்போ அவார்ட் கமிட்டிலேர்ந்து விவரமா சொல்லிட்டாங்கன்னு நினைக்கிறேன்'' என்றார் பித்தன்.

''ஆமாமாம்.. நம்ப படப்பாட்டுதான் செலக்ட் ஆகியிருக்கு''- கே.பி.கே.

''பாருங்க, கமிட்டி செயல்படற லட்சணத்தை... பாட்டை எழுதின கவிஞனுக்கு இன்னும் இன்பார்ம் பண்ணாம இருக்காங்க... அவார்டையே புறக்கணிக்கணும்னு கோவமா வருது கே.பி.கே!'' என்று சந்தோஷம் பிளஸ் பொய்க்கோபக் கலவையாய் கவிஞர் நா தழுதழுத்தது.

"ஓய் தமிழ்! அதுக்கு அவசியமேயில்லை... உமக்கு கமிட்டி இன்பார்ம் பண்ணணும்னும் தேவையேயில்லை'' கே.பி.கே. சொன்னதைக் கேட்ட கவிஞர்,

''போங்க ஸார், எப்பவும் உங்களுக்கு விளையாட்டுதான்'' என்றார் சிருங்காரமாக.

"சொல்றதைக் கேட்டுத் தொலையும்'' என்று கே.பி.கே. காரமாக ஆரம்பித்து "போன வருஷம் வந்த தமிழ்ப்படத்திலேர்ந்து பாட்டை 'செலக்ட்' பண்றதுக்குள்ள பெரும்பாடாய் போச்சாம் கமிட்டிக்கு. எல்லா பாட்டுமே உம்ம பாட்டுபோல 'காலிங் பெல், காஸ்ட்லி பில்'னு அனர்த்தமான 'டைப்'தானாம். அலசி ஆராஞ்சு பார்த்ததிலே 'மதுரைக்கு தெக்காலே' படத்திலேதான் ஒரு சுத்தமான தமிழ்ப் பாட்டு கிடைச்சதாம்.....

"என்ன பேச்சையே காணும்... நம்ம படத்தோட டைட்டில் சாங்தான் அது.... சுதந்திரப் போராட்டப் படமா எடுத்துட்டு பாரதியார் பாட்டு ஒன்னை போடலேன்னா நல்லாயிருக்காதுன்னு நினைச்சி ஒரு பாட்டை டைட்டிலே சேர்க்கச் சொன்னேன். அதுக்குதான் அவார்டாம்... இந்தக் கால கவிஞர்களுக்கு பாடமா இருக்கட்டுமேன்னு வேணுமின்னே இப்படி கமிட்டியிலே செஞ்சாங்களோ என்னமோ...'' கே.பி.கே. சொல்லச் சொல்ல பித்தனுக்கு பற்றிக் கொண்டு வந்தது.

"அப்ப ஏன் ஸார்... கன்ஃபார்ம் பண்ணாம எனக்கு ஆசை காட்டினீங்க... அதை நம்பி தெனாவெட்டிலே நாலைந்து கிராக்கியையும் இப்ப நான் விட்டுவிட்டு நிக்கறேன்'' என்று கவிஞர் புலம்ப,

''அதுக்கென்ன பண்றது, ஹேங் யுவர் செல்ஃப்'' என்று கே.பி.கே. கோபமாக குரல் கொடுத்தார். பித்தன் மனம் நோகவில்லை.

மாறாக, "ஸார் கோவிச்சிக்காதிங்க. திரும்பவும் அதை சொல்லுங்க'' என்று உற்சாகமாக அந்த ஆங்கிலப் பதத்தை குறித்துக் கொள்ளத் தயாரானார்.

நீங்களும் குறித்துக் கொள்ளுங்கள்; கூடிய விரைவில் பின்வரும் திரைப்பாடலை கேட்டுத் தொலைக்க நேரலாம்:

அதுக்கென்ன பண்றது ஹேங் யுவர் செல்ஃப்!

அவளது கூந்தல் லாங் பிலிப்ஸ் பல்ப்! ●

# ஒலிம்பிக் - 'தங்கத் தகவல்கள்!

●● ஒருமுறை ஒலிம்பிக்கில் கலந்து கொண்டுவிட்டு அதன்பின் 40 வருடங்கள் சென்றபின் மறுபடியும் ஒலிம்பிக்கில் பங்கேற்றவர்கள் நாலு பேர். இவான் ஒசியர் (டென்மார்க்), மங்னஸ் கோநோ (நார்வே). டார்வாட் நோலஸ் (பிரிட்டன்), பால் எல்ஸ்டிராம் (டென் மார்க்). இந்த நான்கு ஒலிம்பிக் வீரர்களும் முதலில் 1908-ஆம் ஆண்டு ஒலிம்பிக்கில் பங்கேற்றனர். அதன்பின் 1948-ஆம் ஆண்டு ஒலிம்பிக்கில் மறுபடியும் கலந்து கொண்டனர்.

●● ஒலிம்பிக்கில் கலந்து கொண்டு அதன் பயனாய் சினிமாவில் ஹீரோவாக அறிமுகமான ஒலிம்பிக் வீரர்கள் நால்வர். அவர்கள் ஜானி வைஸ் முல்லர். பாஸ்டர் க்ரேப், ஹெர்மன் பிரிக்ஸ். கிளென் மோரிஸ். இதில் ஜானி வைஸ்முல்லர் (அமெரிக்கா) நீச்சலில் 1924-ஆம் ஆண்டு பாரீஸ் ஒலிம்பிக்கில் தங்க மெடல் பெற்றவர். டார்ஜானாக தொடர்ந்து 11 படங்களில் நடித்தார்.

●● 1912-ஆம் ஆண்டு ஸ்டாக்ஹோமில் நடந்த ஒலிம்பிக்கில் சுவீடன் நாட்டைச் சேர்ந்த 'ஆஸ்கார் ஸ்வான்' என்ற ஒலிம்பிக் வீரர் கலந்து கொண்டு தங்கப் பதக்கம் பெற் றார். அப்போது அவருக்கு வயது என்ன தெரியுமா? 64. பின் அதே ஆஸ்கார் ஸ்வான் தன்னுடைய 70வது வயதில் 1920-ஆம் ஆண்டு 'ஆண்டிவெர்ப்' ஒலிம்பிக்கில் கலந்து கொண்டு வெண்கலப் பதக்கம் பெற்றார். அதிக வயதில் ஒலிம்பிக்கில் பதக்கம் பெற்றவர் இவர்தான்.

●● 'ரெய் மண்டோ-டி-இன்ஜியோ' என்ற இத்தாலி நாட்டு ஒலிம்பிக் வீரர், 1948-ஆம் ஆண்டு லண்டன் ஒலிம்பிக்கில் இருந்து 1976 மாண்ட்ரியல் ஒலிம்பிக் வரை தொடர்ந்து 8 ஒலிம்பிக் போட்டிகளில் கலந்து கொண்டுள்ளார். ஒலிம்பிக் போட்டிகளில் அதிகமுறை கலந்து கொண்டவர் இவர்தான்.

●● அமெரிக்காவின் செயிண்ட் லூயிஸ் நகரில் 1904-ஆம் ஆண்டு நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் வழுக்கு மரம் ஏறுதல், சகதி யில் மல்யுத்தம் போன்ற நூதன விளை யாட்டுகள் இருந்தனவாம். அப்போது கயிறு இழுக்கும் போட்டியும் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது.

●● 1972-ஆம் ஆண்டு மூனிச் நகரில் நடைபெற்ற ஒலிம்பிக் போட்டியில் 'மார்க் ஸ்பிட்ஸ்' என்ற அமெரிக்கர் 7 தங்க மெடல்களைப் பெற்றுள்ளார். ஒரே ஒலிம்பிக் போட்டியில் அதிக தங்க மெடல்களைப் பெற்றவர் இவர் தான்.

●● இதுவரை நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் தனி நபராக அதிக தங்கப்பதக்கங்களைப் பெற்றவர் அமெரிக்காவைச் சேர்ந்த 'ரே எவ்ரே' என்ற ஒலிம்பிக் வீரர்தான். இவர் 1900-ஆம் ஆண்டு பாரீஸில் நடந்த ஒலிம்பிக்கிலிருந்து 1908-ஆம் ஆண்டு லண்டன் ஒலிம் பிக் வரை பங்கேற்று 10 தங்க மெடல்களைப் பெற்றுள்ளார்.

— கோவி. இராஜேந்திரன்

REGISTERED NO.TN/MS (S) M 4392 Registered as Newspaper in Srilanka
Licensed to post without prepayment under licence No. TN/MS (S) 161